ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 275.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது
ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 23 | 1971ஞு ஆகஸ்டுமீ வெளியீடு<br>விரோதிகிருத்ஞு ஆடிமீ | ஸஞ்சிகை 11 |
|---|---|---|

## அரிய பெரியதொரு வாய்ப்பு

(பத்ராதிபர் அண்ணங்கராசாரியரின் அறிக்கை.) ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு லிபிகளில் இன்றுவரை அடியேன் அச்சிடுவித்துள்ள பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளான திவ்ய க்ரந்தங்களும், பதினைந்து துறைகளில் அடியேன் சொந்தமாக இயற்றி வெளியிட்டுள்ள நூல்களும் பரஸ்ஸஹஸ்ர மென்பதை உலகமறியும். ஸ்ரீ ராமாநுஜன் ராப்பர் கடைசி பக்கத்தில் அந்தத் துறைகளெல்லாம் விளக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பதின்ரோவது துறையிலான பரபக்ஷ ப்ரதிக்ஷேப நூல்கள் சிலர்க்கு விரும்பத்தகாதவையாயிருக்கலாம் மற்ற துறைகளின் நூல்கள் யாவும் உலகமெங்கும் பரந்து லோகோபகாரகங்களென்று மாச்சரிய மற்றவர்களால் மதிக்கப்பட்டவை. இவற்றில் செலவழிந்தவை பாதியும் சேமத்திலிருப்பவை பாதியுமாகவுள்ளது. ஸமீப காலத்தில் மணவாள மாமுனிகளின் அறுநூறாண்டு மஹோத்ஸவத்தை முன்னிட்டு ஐந்து பாஷைகளிலும் அச்சிடப்பட்டுள்ள நூல்கள் ரூ. பலவாயிரக்கணக்கில் செலவு கொண்டவை. செல்லுக்கும் எலிக்கும் இரையாக்காமல் இவற்றைக் காப்பாற்றுவது அச்சிடுங் காரியத்தினும் மிக அரிதாகவுள்ளது. அதற்காக ஒரு முடிவு செய்திருப்பது தெரிவிக்கப்படுகிறது; முக்கியமாகப் புத்தக வியாபாரிகள் கவனிக்கத்தக்கது. ஒரே தடவையாக ஆயிரம் ரூபா செலுத்துமவர்கள் 1400*– ஆயிரத்து நானூறு ரூபா விலையுள்ள புத்தகங்கள் பெறலாம். ஒரே பாஷையில் என்பதில்லை. நம்மிடம் ஐந்து பாஷைகளிலுமுள்ள நூல்களில் எதையும் கணக்கிட்டுக் கொள்ளலாம. நாம் வெளியிட்டுள்ள புத்தகங்களின் ஜாபிதா எங்குங்கிடைக்குமாதலால் அது கொண்டு அபேக்ஷையைத் தெரிவிக்கலாம் விருப்பமுடையார்.

ஆயிரத்திற்கு ஆயிரத்து நானூறு என்பதுபோல, நூற்றுக்கு நூற்று நாற்பது ஆகலாமோ? என்று கேட்கலாகாது.

## (ப்ரஸங்காத் வேறுசில விண்ணப்பங்கள்)

நாம் அச்சிட்ட பூர்வாசார்ய க்ரந்தங்களுள் ஸ்ரீமத் வேதாந்ததேசிக க்ரந்த மாலை மட்டும் முப்பதாண்டுகட்கு முன்பு அச்சிட்டதாதலால் இற்றைக்குப் பன்னிரண்டாண்டுகட்கு முன்னமே பிரதிகளெல்லாம் செலவாகிவிட்டபடியால் அந்த க்ரந்தமாலையைமட்டும் விரும்பவேண்டா. இஃது இருப்பில்லையென்று நாம் பலகால் தெரிவித்திருந்தும் அதை நோக்காது பலர் அபேக்ஷித்துக்கொண்டேயிருப்பதால் இங்கு அதைப்பற்றித் தெரிவிக்கலாயிற்று. அந்த க்ரந்தமாலை மறுபதிப்பாக வேண்டியது மிகவும் அவசியமே. முப்பதாண்டுகட்கு முன்பு அடியேன் அச்சிட்டபோது ஏறக்குறைய ஐம்பதினாயிரம் ரூ. செலவிடப்பட்டது. இப்போது அச்சிடுவதானால் மூன்று நான்கு லக்ஷம் ரூபா இன்றியமையாதென்பதை நாம் சொல்லவேணுமோ? ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி அஹோபில மடாதீச (வர்த்தமாந) அழகியசிங்கர் ஸந்நிதியிலும் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆண்டவன் ஸந்நிதியிலும் அடிக்கடி பிரார்த்தித்து வருகிறேன். ஸ்ரீமத் அழகியசிங்கர் நேற்று வைசாகோத்ஸவத்தில் ஒருநாள் காஞ்சிக்கு எழுந்தருளியிருந்தபோதும் தெண்டன் ஸமர்ப்பித்துப் பிரார்த்தித்தேன். ஸர்வார்த்தஸித்தி ஸமேத – தத்வமுக்தா கலாப மொன்றையாவது (முன் அச்சிட்ட வியாக்கியான த்வயஸஹித) அதிகரண ஸாராவளியைப்போல்) அச்சிடுவித்தருளவேணும் என்று ஸவிநயம் பிரார்த்தித்தேன். இதுவரை பலிக்கவில்லை. இந்த கைங்கர்ய நிர்வாஹத்திற்கு அடியேன்தான் இட்டுப் பிறந்தவன்போலும்.

(உபஸம்ஹாரம்) ப்ரக்ருதம் ஆயிரம் ரூபா கொடுப்பவர்களுக்கு ஆயிரத்து நானூறு ரூபா விலையுள்ள புத்தகங்கள் கொடுப்பதாக வெளியிட்டது பணத்தை வாங்கிச் சேமித்து வைப்பதற்காகவன்று; "மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:" என்று காளிதாஸர் கூறியபடி அடியேனுடைய மனோரத ப்ரவாஹங்களை யெல்லாம் ஆயுச்சேஷத்தில் குறையறப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவே.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (ஜகத்ப்ரஸித்தப்ரபாவரான) ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் சென்ற ஸம்வத்ஸரத்தில், உலகம்பரந்த புகழாளரான T. V. S. கம்பெனித் தலைவர்களைச் சந்தித்து ஸ்ரீ தேசிக க்ரந்தமாலையை மறுபதிப்புச் செய்யவேணுமென்று ப்ரஸ்தாவிக்க, அவர்கள் "ஸ்வாமி ஸந்நிதியில் இருபதினாயிரம் ரூபா ஸமர்ப்பித்து விடுகிறோம். நிறைவேற்றியருள்வது" என்றார்களாம். "அந்தப் பணத்தை உம்மிடம் அனுப்பச்செய்கிறேன், நிறைவேற்ற முடியுமா?" என்று அடியேனைக் கேட்டருளியிருந்தார். ஸ்ரீ தேசிக க்ரந்தமாலையை ஸமக்ரமாக அச்சிடுவதற்கு இது எந்த மூலைக்கு? என்று விஜ்ஞாபித்து நின்றேன். *சங்கம் சரிந்தன சாயிழந்தேன் என்றிருக்குமடியேன் பிறரிடத்தில் பெருந்தொகையைப் பெற்று துணுக்குத்துணுக் கென்றிருக்க விரும்புகின்றிலேன். பேரருளாளன் திருவுள்ளமானபடி யாகுக. .... .... .... *

# திவ்யப்பிரபந்தப் பதிப்பு.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தை (மூலம் மட்டும்) அடியேன் இருமுறை பதிப்பித்தேன். பிரதிகளெல்லாம் செலவாயின. நேற்று ஸாதாரணவாண்டில் மணவாளமாமுனிகளின் அறுநூற்றாண்டு நிறைவு நினைவுமலராக மீண்டும் பதிப்பிக்கவேணுமென்று ஆசைகொண்டேன். சென்னையில் அடியேனுடைய கார்ய நிர்வாஹ துரந்தரராய் விளங்கும் ஆஸ்திக சிகாமணியான ஸ்ரீமான் V. N. தேவநாதன் என்பவர் "இக்கைங்கரியத்தை அடியேனுக்கு நியமிக்கவேணும்" என்றார், ஆகுகவென்றேன். அவர் நேற்றை ஐப்பசித் திருமூலத்தன்றுதான் அச்சிடுவிக்கும் பணியைத் தொடங்கினார். ஸாதாரணவாண்டு நிறைவுக்குள் பூர்த்தியாகவில்லை; வைகாசித் திருமூலத்தன்று பூர்த்தியாயிற்று. அதில் பல அனுபந்தங்கள் சேர்க்க வேண்டியிருந்தது. ஆழ்வார்களின் திருவவதாரஸ்தலத் திருவுருவப் படங்களைச் சேகரித்துச் சேர்க்கவேண்டியிருந்தது உயர்ந்த பைண்டு செய்விக்க வேண்டியிருந்தது. பகவத்பாகவத கிருபையினால் எல்லாம் பூர்த்தியாகி ஸ்ரீ கோசம் வெளிவந்தாயிற்று. புத்தகமொன்றின் விலை ரூ. பதினைந்கு. தபாற் செலவு 3 ரூபா. புத்தக வியாபாரிகளுக்கு ஸௌகரியம் செய்துகொடுக்க ஏற்பாடு உண்டென்று தெரிகிறது. விவரணங்கள் கீழ்க்கண்ட விலாஸத்திற் கெழுதித் தெரிந்து கொள்வது. புத்தகமும் அதே விலாசத்தில்தான் கிடைக்கும்.

கிடைக்குமிடம்:—

V. N. DEVANADHAN,
213, Govindappa Naicken St,
G. T. Madras-1.

ஸ்ரீமான் V. N. தேவநாதன்.
213, கோவிந்தப்பநாய்க்கன் தெரு,
மதராஸ்-1.

---

# "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"

ஏறக்குறைய ஒருமாத காலமாகப் பல ஜில்லாக்களிலிருந்தும் பல கடிதங்கள் வரப்பெறுகின்றோம். பெரும்பாலும் தேவாலயங்களின் பட்டாசார்களும், சிறுபான்மை கோவில்களில் பற்றுள்ள பக்தர்களும் எழுதிவருகின்ற கடிதங்களைப் பற்றி இந்த ப்ரஸ்தாவம் செய்கிறோம். தற்காலம் ஆங்காங்குக் கோவில்களில் பக்தர்கள் செய்விக்கும் அர்ச்சனைகள் தமிழ் மொழியிலே(லும்) நடைபெற வேண்டுமென்று கட்டளை பிறந்திருப்பதாகத் தெரிவித்து அதற்குரிய திருநாமமாலைகளை எந்த முறையில் சேகரித்துக்கொள்வது? என்பதே மேலே குறித்த கடிதங்களெல்லாவற்றினுடையவும் நோக்கம். சில கோவில்களிலிருந்து எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்களும் கேட்டிருக்கிறார்கள். இத்தகைய கடிதங்கள் பெரும்பாலும் தினப்படியாகவே வந்துகொண்டிருக்கின்றன. சிலவிடங்களில் சில பெரியார்கள் ஆழ்வார்களருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்களிலிருந்து நூற்றெட்டுத் திருநாமங்களைத் திரட்டியெடுத்து எழுதிக்கொடுத்து அர்ச்சனையைத் தொடங்கிவைத்ததாகவும் அறிகிறோம். முக்கியமாகத் திருக்குடந்தை ஆராவமுதன் (சார்ங்கபாணிப் பெருமாள்) ஸன்னிதியைக் குறிப்பிடலாம்.

இடையில் நாம் சில விஷயங்களை விண்ணப்பஞ் செய்ய விரும்புகிறோம். உலகம் அறியாத காலந்தொடங்கியே ஸகல நாடுகளிலும் ஸகல ஆலயங்களிலும் அர்ச்சனையென்பது நடந்துவருகின்றது. ஸஹஸ்ரநாமார்ச்சனை, அஷ்டோத்தர சத நாமார்ச்சனை, கேசவாதிநாமார்ச்சனை என்று நடைபெறுவதைக் காண்கிறோம். எம்பெருமானுடைய திருவவதாரத்தைப்பற்றிச் சொல்லியுள்ள விடங்களில் *அஜாயமாநோ பஹுதா விஜாயதே* என்றும், *பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந* என்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்* என்றும் *நிலைவரம்பில பல பிறப்பாய்* என்றும் சொல்லுகிறபடியே பகவதவதாரங்களானவை எண்ணிறந்தனவா யிருக்கச் செய்தேயும் சிந்தனைக்கு எளிதாக தசாவதாரங்கள் என்று கொண்டிருக்குமாபோலே, எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதி சேஷ்டிதாதிகளின் அளவின்மைக்கு ஏற்ப அவனுடைய திருநாமங்களும் அளவில்லாதனவாயிருக்கச் செய்தேயும் *தேவோ நாமஸஹஸ்ரவாந்* பேராயிரமுடையான்* என்னும்படி ஒரு ஸங்க்யை ஏற்பட்டது. ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களில் *ஓராயிரமாயுல கேழளிக்கும் பேராயிரங் கொண்டதோர் பீடுடையன்* பேராயிரமுமோதுமின்கள் *ஓராயிரம் பேருமுடைய பிரான்* என்றிப்படி பலபல விடங்களிலும் ஸஹஸ்ரநாம ப்ரஸ்தாவம் செய்திருப்பது வ்யாஸப்ரணீதமாக ப்ரஸித்திபெறற விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தையே யென்பதில் ஆர்க்கும் ஐயமிராது

பெரியாழ்வார் திருமாலிருஞ்சோலைப் பதிகமொன்றில் "அறுகால் வரி வண்டுகள் ஆயிர நாமஞ் சொல்லிச் சிறுகாலைப் பாடும்" என்று வண்டுகளுங்கூட ரீங்காரமுகத்தாலே ஸஹஸ்ரநாமத்தை ஆளத்திவைத்துப் பாடுவதாக அருளிச் செய்கிறார். திருமங்கையாழ்வாருடைய சிறிய திருமடலில் ஓர் ஆச்சரியங் கேண்மின். கண்ணபிரானுடைய குடக்கூத்திலே யீடுபட்டு அறிவிழந்த ஒரு கோபியின் நிலைமையை யடைந்து பரிதபிக்கின்ற பரகால நாயகியின் திருத்தாயார் திருமகளுக்கு நேர்ந்த நோயின் நிதானத்தை ஒரு கட்டுவிச்சியைக் கேட்க, அவள் பேராயிரமுடையானென்றாள்; மற்றும் பலபல சொல்லிக் கொண்டு போந்து முடிவில் "பேராயிரமுடையான் பேய்ப்பெண்டீர்! நும் மகளைத் தீரா நோய் செய்தானெனவுரைத்தாள்" என்று தலைக்கட்டிற்று. பேராயிரமுடையானில் தொடங்கிப் பேராயிரமுடையானில் தலைக்கட்டிற்றென்க. பிறகு திருத்தாயார், 'இஃது எம்பெருமானடியாக வந்த நோய் தானே, எளிதாகப் பரிஹாரமாய் விடும்' என்று சொல்லிக் கையொழிந்து நின்றமையைச் சொல்லிவிட்டு, (பரகால நாயகி) தன்னுடைய அஸஹ்ய வேதனையைச் சொல்லிக் கொண்டுபோய் "பெருந் தெருவே ஊராரிகழிலும் மடலூரா தொழியேன்" என்று திருமடலைத் தலைக்கட்டுமிடத்து "எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றி மடலூர்வேன்" என்றாள். மடலூருவதாவது எம்பெருமான்மேல் பழி தூற்றிக் கொண்டு தெருவேறப் புறப்படுகை. [ப்ரபந்நர்களுக்கு இந்த அதிப்ரவ்ருத்தி கூடுமா? என்கிற விசாரம் இங்கு வேண்டா; அதைப்பற்றி ஸ்ரீவசந பூஷணாதிகளை ஸேவித்துத் தெளிவது.] ப்ரக்ருதம் (ஆழ்வார்) செய்ய நினைக்கிற அதிப்ரவ்ருத்திக்கு "பேராயிரமும் பிதற்றி" என்னப்படுகிற ஸஹஸ்ரநாம கீர்த்தனம் மந்த்ரமா என்ன? என்று கேள்வி கேட்க வேண்டியது முக்கியம். இங்குப் பெரியவாச்சான்பிள்ளை தமது வியாக்கி

யானத்தில் அருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்தியைக் கேளீர். [கண்ணீர்ப் பெருக்கின்றி அந்த ஸ்ரீ ஸூக்தியை அடியேனால் அநுவதிக்கமுடியவில்லை. ஒருவாறு தேறி அநுவதிக்கிறேன்.]

"[எண்ணருஞ் சீர்ப்பேராயிரமும் பிதற்றி] குணகதநம் பண்ணுகைக்கு ஒரு ஸ்ரீ ஸஹஸ்ரநாம முண்டிறே; அப்படி குணஹாநிக்கும் ஒரு ஸ்ரீஸஹஸ்ர நாமம் பண்ணுகிறேனென்கிறாள்."

இதுவாயிற்று வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி. உண்மையில் மடலூரும்போது ஸஹஸ்ரநாமஞ் சொல்லுவது பொருந்தாதன்றோ. உடனே "ஊராரிகழினும்" என்றுள்ளது. ஸஹஸ்ரநாமஞ் சொன்னால் ஊராரிகழ ப்ரஸக்தியேது? ஆழ்வாருடைய திருவுள்ளத்தை ஆழ்ந்தறிந்து வியாக்கியானம் செய்தருளினபடியன்றோ விது. குணஸம்ருத்திக்கு ஒரு ஸஹஸ்ரநாமம் இருப்பதுபோல குணக்கேட்டுக்கு ஒரு ஸஹஸ்ர நாமம் தாம்செய்வதாக ஆழ்வார் அச்சமுறுத்துகிறபடி.

எம்பெருமானுடைய குணக்கேடுகளைக் காட்டும் திருநாமங்கள் எப்படியிருக்கக் கூடுமென்று சிறிது ஆலோசித்துப் பார்ப்போம். அதனைத் திருமங்கையாழ்வார் தாமே பெரிய திருமடலில் (பிற்பகுதியில்) "என்னிலைமையெல்லாம் அறிவித்தாலெம்பெருமான், தன்னருளுமாகமும் தாரானேல், தன்னை நான் மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும், தன்னடியார் முன்பும் தரணிமுழுதாளும், கொன்னவிலும் வேல்வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும், தன்னிலைமை யெல்லாமறிவிப்பன்" என்று பீடிகையிட்டு அவனுடைய குணக்கேடுகளை ஒவ்வொன்றாகப் பேசத்தொடங்கி, நவநீத சோரன் ஆய்ச்சியர் தாம்பினால் கட்டுண்டு அழுது கிடந்தவன், ஆநிரைமேய்த்தவன் தூதுசென்றவன் குடக்கூத்தாடினவன் ஸ்த்ரீவதம் செய்தவன் இத்யாதிகளைப் பேசி முடித்தார். ஆண்டாள்

"கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான்.
பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாள்! உங்களுக்கு ஏச்சுக்கொலோ!"

என்றாள். கூரத்தாழ்வான் * கோபாலநாதி யதிதம் பவதீயகர்மேதி ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத் * என்றும், * தூர்த்தாயிதம் தவ ஹி யத் சில ராஸ கோஷ்ட்யாம் தத்கீர்த்தநம் பரமபாவநம் ஆமநந்தி * என்று மருளிச்செய்தார். குணவித்தர்கள் நினைந்து நைந்து உள்கரைந்துருகும்படியான சேஷ்டிதங்களைக் கூறும் திருநாமங்களே அவனுடைய குணக்கேடுகளைத் தெரிவிக்கவல்ல திருநாமங்களென்றதாயிற்று. ஆகவே எம்பெருமானைக்குறித்து * கடியன் கொடியன் நெடியமால் * என்றாற்போலே எது சொன்னாலும் துதியிலேதான் பர்யவஸித்து நிற்குமென்றதாயிற்று. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * மின்னிடை மடவார் பதிகத்தில் ப்ரணயரோஷபரீவாஹமாக "ஒருநான்று தடிபிணக்கே" இத்யாதியான திரஸ்காரமொழிகளை அபரிமிதமாகச் சொல்லிவிட்டு நிகமனப்பாசுரத்தில் "குருகூர்ச் சடகோபன் ஏத்திய தமிழ்மாலை" என்று இவையும் தோத்திரமாகவே தலைக்கட்டும்படியைத் தெரிவித்தருளினாராயிற்று. அன்புடையார் அவனை நோக்கிச் சொல்லுவதெல்லாம் தோத்திரமே யென்னத்தட்டில்லை.

இப்போது ஆங்காங்கு அவரவர்கள் நாமாவளிகள் இயற்ற நேர்ந்துவிட்டது. தமிழிலேயே அர்ச்சனை நடத்தவேணுமென்பதைப் பற்றிச் சில பெரி

யோர்கள் ‘இதென்ன புதுவழக்கம்!’ என்னக்கூடும். உண்மையில் இதில் தவறு ஒன்றுமில்லை. ஆழ்வார்களிருவர் எம்பெருமானைத் தென்மொழியும் வடமொழியு மாகவே பேசியுள்ளார்கள். குலசேகராழ்வார் தமது திருமொழியில் (1-4.)

“அந்தமிழினின்பப்பாவினை—அவ்வடமொழியை
அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளுங்கோவினை”

என்றார். அரங்கனையே தமிழ்மொழியாகவும் வடமொழியாகவு மருளிச்செய்தபடி. திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் (4). *செந்திறத்த தமிழோசை வட சொல்லாகி* என்றார். பொருள் அதுவே. மேலெடுத்த இரண்டு பாசுரங்களிலும், தென் மொழியை முற்கூறியிருப்பதும் அதற்கு மட்டும் சிறப்படைமொழி கொடுத் துக் கூறியிருப்பதும் உற்று நோக்கத்தக்கது.

இனி, பொய்கையாழ்வார் *அவரவர் தாந்தாமறிந்தவாறேத்தித் தொழுவர்* என்றும், நம்மாழ்வார் *தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்து பூசிப்ப* என்றும் அருளிச் செய்ததற்கேற்ப பக்தஜனங்கள் தம் தம் அன்புக்கு இணங்க எம்பெருமானது திருநாமங்களைச் சொல்லி ஏத்துகை ஏலாததன்று. அடியேன் இருபத்தைந்து வருடங்களுககு முன்பு “திவ்யப் பிரபந்தத் திருநாமமாலை” என்றொரு புத்தகம் வெளியிட்டிருக்கிறேன். அது உலகமெங்கும் பரவியுள்ளது. அதில் திவ்யப்பிரபந்தங்க ளெல்லாவற்றிலிருந்தும் ஐயாயிரத்துச் சொச்சம் திரு நாமங்களைத் திரட்டி வெளியிட்டிருக்கிறேன். ஆனால் அந்த புத்தகம் இப்போது மறுபதிப்பாக வேண்டிய நிலைமையிலிருக்கிறது. அதுதவிர, ஆழ்வார்களுகந்த இராமன், ஆழ்வார்களுகந்த கண்ணன்” என்ற மகுடமிட்டு, இராமனைப்பற்றியும் கண்ணனைப்பற்றியும் ஆழ்வார்களருளிச் செய்த சந்தைகளை யெல்லாம் தொகுத் தெடுத்து வெளியிட்டிருக்கிறேன். அது இவ்விதழிலும் (பலபக்தர்களின் கோரிக் கையின்படி) சேர்க்கப்பட்டிருக்கின்றது. அதிலிருந்து பல நூற்றுக்கணக்கான திருநாமங்களைக் கொள்ளலாம். அதுவுந்தவிர இப்போது ஒரு நூற்றெட்டுத் திருநாம மாலையை ஆழ்வார்களின் அருளிச் செயல்களிலிருந்தே தொகுத்து இதில் வெளியிட்டிருக்கிறேன்.

கீழே நாம் எடுத்துக்காட்டியுள்ள பொய்கையார் பாசுரமும் நம்மாழ்வார் பாசுரமும்—(அவையாவன)—* அவரவர் தாந்தாம் அறிந்தவாறேத்தி* தங்கள் அன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப * என்கிற பாசுரங் கள்] அவரவர்கள் தம்தம் ஞானசக்திகளுக்கிணங்க ஸ்வயமாகவே எம்பெருமானைத் தோத்திரஞ்செய்ய இடமளிக்கின்றன. ஆங்காங்கு அர்ச்சகர்களுக்குச் சிரமங் கொடாமல் பக்தர்கள் தாங்களே துதிக்கலாம் என்கிற கட்டளையும் ஏற்படலாமே திருமழிசைப்பிரான் * இருக்குவாய் முனிக்கணங்களேத்த யானுமேத்தினேன்* என்றும் நம்மாழ்வார் * இரைத்து நல்ல மேன்மக்களேத்த யானுமேத்தினேன்* என்றும் தங்களிடத்தில் நைச்சியத்தை ஏறிட்டுக்கொண்டு பேசினார்கள்; அப்படி ஏறிட்டுக்கொள்ளவேண்டாதே இயற்கையான நைச்சியமுள்ளவர்கள் “கோணக் கோண கோவிந்தம்” என்கிறப்போலே எதைச்சொல்லி கோஷித்தாலும் எம்பெருமான் திருவுள்ளமுகக்கத் தட்டில்லை. தெய்வமே கிடையாதென்றும் அர்ச்சனை ஏதுக்கு? என்றும் சொல்லாமல் ஏதோவொருபடி அர்ச்சனைக்கு இடங் கொடுப்பதற்கு ஆத்திகர்கள் உகக்கவேணும். (இனித் திருநாமமாலை காண்மின்.)

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திவ்வியப் பிரபந்தங்களிலிருந்து
# காஞ்சி அண்ணங்கராசாரியர் தொகுத்த
# நூற்றெட்டுத் திருநாம மாலை.

1 அமரர்களதிபதியே போற்றி
2 அருளாழியம்மானே போற்றி
3 ஆழ்கடலைக்கடைந்தாய் போற்றி
4 ஆழியங்கையனே போற்றி
5 இமையோர்தலைவா போற்றி
6 இரணியனுடலிடந்தாய் போற்றி
7 ஈரிரண்டுமால்வரைத்தோளா போற்றி
8 ஈசற்கும் நான்முகற்குந் தெய்வமே ,,
9 உலகமுண்ட பெருவாயா போற்றி
10 உள்ளுவாருள்ளத்துறைவாய் போற்றி
11 ஊற்றமுடைய பெரியாய் போற்றி
12 ஊணுகப்பேய்முலைநஞ்சுண்டாய்போற்றி
13 எல்லாவுலகுமுடையாய் போற்றி
14 எம்பிரானே யென்னையாள்வாய் போற்றி
15 ஏரார்ந்த கருநெடுமாலே போற்றி
16 ஏழ்விடைசெற்ற பெருமானே போற்றி
17 ஐம்படையேந்துகையினாய் போற்றி
18 ஐவர்க்கருள்செய்தவம்மா போற்றி
19 ஒண்டாமரையாள்கேள்வா போற்றி
20 ஒன்றியொன்றியுலகம் படைத்தாய் ,,
21 ஓதம்போல்கிளர்வேதனே போற்றி
22 ஓதநீர்வண்ணவண்ணலே போற்றி
23 கண்ணனென்னுங்கருந்தெய்வமே ,,
24 காக்குமியல்வினனாய் போற்றி
25 கிட்டினரை மயக்குங்கேசவா போற்றி
26 கீதையமுதமீந்தாய் போற்றி
27 குருந்தொசித்த கோபாலா போற்றி
28 கூனிகூன்நிமிர்ந்தகோவிந்தா போற்றி
29 கெண்டையுங் குறளும் புள்ளுமானாய் ,,
30 கேழல்திருவுருவானாய் போற்றி
31 கையாருஞ் சக்கரத்தண்ணலேபோற்றி
32 கொண்டல்வண்ணா குடக்கூத்தாபோற்றி
33 கோவர்த்தனமலையெடுத்தாய் போற்றி
34 கோவலர்தங்கோவே போற்றி
35 சன்மம்பலபல செய்தாய்போற்றி
36 சாளக்கிராமமுடையாய்போற்றி
37 சிந்தனைக்கினிய செல்வனேபோற்றி
38 சீதைவாயமுதமுண்டாய் போற்றி
39 சுடர்கொள் சுடராழியாய் போற்றி
40 சூழல்பலபலவல்லாய்போற்றி
41 செங்கண்மாலெங்கள்மாலேபோற்றி
42 சேயனணியன் சிறியன் பெரியாய் ,,
43 சொன்னவண்ணஞ் செய்வாய்போற்றி
44 சோலைசூழ்குன்றெடுத்தானேபோற்றி
45 ஞாலமேழுமுண்டாய்போற்றி
46 ஞானங்கனிந்த நலந்தருவாய்போற்றி
47 தண்டாமரைக்கண்ணனேபோற்றி
48 தாவியன்றுலகளந்தாய்போற்றி
49 திருவுக்குந்திருவாகிய செல்வா போற்றி
50 தீங்கரும்பின் தெளிவேபோற்றி
51 துரங்கம்வாய் பிளந்தாய்போற்றி
52 தூவியம்புள்ளுடையாய்போற்றி
53 தெய்வத்துக்கரசான தெய்வமே ,,
54 தேனிலினியபிரானேபோற்றி
55 தைத்திரியா சாமவேதியனே போற்றி
56 தொண்டர்க்கினிய பெருமானேபோற்றி
57 தோள்களாயிரத்தானே போற்றி
58 நலந்திகழ் நல்லநாரணாபோற்றி
59 நான்முகனைப் படைத்தாய்போற்றி
60 நிறமுடைநால்தடந்தோளனேபோற்று
61 நீண்டதோளுடையானேபோற்றி
62 நுடங்கெயிலிலங்கை செற்றாய் போற்றி
63 நூற்றுவரையன்று மங்க நூற்றாய் ,,
64 நெடுமையாலுலகேழளந்தாய் போற்றி
65 நேமிசேர்தடங்கையா போற்றி
66 நைமிசாணியத்தெந்தாய் போற்றி
67 நொந்தாராக்காதலைத்தருவாய் போற்றி
68 நோய்கள் தீர்க்கும் நெடியாய் போற்றி
69 பயிலுஞ்சுடரொளி மூர்த்தியே போற்றி
70 பாற்கடல் துயின்ற பரமனே போற்றி
71 பின்னானார் வணங்குஞ் சோதீ போற்றி
72 பீதகவாடையுடையாய் போற்றி
73 புவனியெல்லாம் படைத்தபுனிதா ,,
74 பூவைப் பூவண்ணமேனியாய் போற்றி

75 பெருமக்களுள்ளவர்தம் பெருமானே போற்றி
76 பேய்ச்சிமுலையுயிருண்டாய் போற்றி
77 பைந்துளவத்தாரணிந்த வேந்தாய் ,,
78 பொருமாழிசங்குடையபெம்மான் ,,
79 பேரதார் தாமரையாள் கேள்வா போற்றி
80 பௌவங் கொண்ட திருவாளா போற்றி
81 மலர்மேல்மங்கை மணவாளா போற்றி
82 மாயமான்மாயச் செற்றாய் போற்றி
83 மின்னுமழைதவழும்மேகவண்ணா ,,
84 மீனாயேனமுமானாய் போற்றி
85 முந்நீர்ஞாலம் படைத்தாய் போற்றி
86 மூவரில் முந்திய முதல்வா போற்றி
87 மெய்யமர்பல்கலன் நன்கணிந்தாய் ,,
88 மேலையார்க்கெல்லாம் மேலையாய்போற்றி
89 மைந்நிறக்கடல் வண்ணனே போற்றி
90 மொய்யநீள்குழல்சேர் தோளினாய் ,,
91 மோராார்குட முருட்டினாய் போதிறி
92 மௌவல்குழலாய்ச்சியன்பனே போற்றி
93 யவையும் யாவருமானாய் போற்றி
94 யானையின் துயரம் தீர்த்தாய் போற்றி
95 வங்கமா கடல்வண்ணா போற்றி
96 வாசத்தடம்போல் வருவாய் போற்றி
97 விண்ணவர் தங்கள் தெய்வமே போற்றி
98 விட்டுசித்தன் மனத்துறைவாய் போற்றி
99 லீலின்பம் மிகத்தருவாய் போற்றி
100 வெற்பெடுத்தாநிரை காத்தாய் போற்றி
101 வெம்மாவாய் கீண்டகண்ணா போற்றி
102 வேதியர் தொழுந் தெய்வமே போற்றி
103 வேதங்களேத்தும் விமலா போற்றி
104 வையமெல்லாந்தொழ நின்றாய் போற்றி
105 வைதிகன்பிள்ளைகளீந்தாய் போற்றி
106 வாழிவாழி மாயோய்வாழி
107 நெடியோய்வாழி நீண்டநாள்வாழி
108 நிச்சலும்வாழி நீடுலகம்வாழ.

சில சமயங்களில் சுருக்கமான அர்ச்சனைகளையும் செய்வதுண்டு;
அப்போதைக்கு இந்தத் திருநாமமாலை உதவும்.

## பன்னிரு திருநாம மாலை.

1. பொய்கையார் புகழ்ந்த புனிதா போற்றி
2. பூதத்தாரேத்தும் புகழினாய் போற்றி
3. பேயார்பணிந்த பெருமாள்! போற்றி
4. மழிசைப்பிரான் மகிழ்ந்த மாதவா போற்றி
5. பராங்குச னேத்தும் பரமனே போற்றி
6. குலசேகர னேத்துங் கொண்டலே போற்றி
7. பட்டர்பிரா னேத்தும் பவித்திரன் போற்றி
8. கோதைமலர் சூடுங் குழகனே போற்றி
9. துளவத் தொண்டரேத்தும் தூயாய் போற்றி
10. பாண்பெருமா ளேத்தும் பரமனே போற்றி
11. மங்கையர்கோ னேத்தும் மாதவா போற்றி
12. மதுரகவி வணங்கும் மாயவன் போற்றி.

ஆழ்வார்க ளேத்துமழகா போற்றி. ஆரியர்க ளேத்து மனந்தனே போற்றி.
உலகங்கட் கெல்லா முயிரே போற்றி.

கேசவன் முதல் தாமோதரனீறான திருநாமங்கள் உபய பாஷைக்கும்
பொதுவானவையுள்ளன.

இங்ஙனம்,
P. B. அண்ணங்கராசாரியர்.

# "நினைதோறும் சொல்லுந்தோறும்."

ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் எம்பெருமானை ஆச்சரியமாக அநுபவித்திருந்தாலும் நம்மாழ்வாருடைய அநுபவம் ஈடுமெடுப்புமில்லாத தென்பது அநுபவரஸிகர்களுக்கே அறியவெளிது. அவருடைய திருவாய்மொழியைக் கொண்டு காலக்ஷேபம் செய்வதைத் தானே பகவத்விஷய காலக்ஷேபமென்கிறார்கள்பெரியோர்கள். அவருடைய ஒரு பாசுரம் (திருக்காட்கரைப் பதிகத்தில்) "நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சு இடிந்து உகும், வினைகொள் சீர் பாடிலும் வேம் எனதாருயிர்" என்பது. எம்பெருமானுடைய திருக்குணங்களை நினைக்கப் புக்காலும் சொல்லப்புக்காலும் தமக்கு விலக்ஷணமான விக்ருதி விளைகின்றதென்பதை விலக்ஷணமாகவருளிச்செய்கிறார். இந்த திவ்யஸூக்தியைச் சுக்கான் பரல் போன்ற நெஞ்சுடைய நாம் எத்தனை தடவை சொன்னாலும் நமக்கு ஒருவிதமான விக்ருதியும் விளைகின்றதில்லை. ஆனால் அடியேனுக்கு விளைகின்றதொரு விக்ருதியை விஜ்ஞாபிக்கிறேன். இது பகவத் விஷயத்திலன்று, பாகவத விஷயத்தில். ஸ்ரீஸூக்திரத்நாகர ஸ்வாமியென்று ப்ரஸித்தரான (ஆழ்வார் திருநகரி) இளையவில்லி சடகோபாசரர்யஸ்வாமி திருநாடலங்கரித்தது நேற்று வைகாசி மாதத்தில், ஏறக்குறைய இரண்டரை மாதங்கள் பூர்த்தியாய்விட்டன வென்னலாம். மூன்று மாதங்களுமென்னலாம். இச்செய்திக்காக ஆருத்துயரமடைந்தவர்கள் நமது நாட்டில் சிலரல்லர், பலபலரென்னலாம். எப்படிப் பட்டவர்களுக்கும் எத்தகையதுக்கமும் நாளடைவில் மறந்தொழியவும் மறைந்தொழியவும் நேர்கின்றது. ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் ஐந்தாம் ஸர்க்கத்தில் பெருமாளுடைய திருவாக்கொன்று — "சோகச் ச கில காலேந கச்சதா ஹி அபகச்சதி, மம ச அபச்யத: காந்தாம் அஹ ந்யஹ நிவர்த்ததே." என்பது. நாள் கழியக் கழிய துக்கங்களும் கழியுமே; எனக்கோ அப்படியல்லாமல் பிராட்டியின் பிரிவாலே நாள்தோறும் சோகம்



வளர்ந்து செல்லாநின்றதே யென்கிறார் பெருமாள். இளையவில்லி ஸ்வாமியின் பிரிவில் இதெல்லாம் நினைவுக்குவந்து சோகம் மறக்கமுடியாதநிலைமையிலுள்ளது.

பலவாண்டுகளுக்கு முந்தியவொரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகின்றது. மஹாபாரதத்தின் தமிழ்மொழிபெயர்ப்பை யச்சிட்டு வெளியிட்ட கீர்த்தி மூர்த்தியான ம. வீ. ராமானுஜாசாரியர் ஸ்வாமியைப் பலருமறிவர். அவர் மறைந்து பல வருஷங்களானாலும் உலகம் அவரை மறவாதன்றோ. அவர் திருக்குடந்தையில் வஸித்தவர். அவர்க்கு மஹாகுணவானான ஒரு புதல்வனுடைய வியோகம் ஏற்பட்டது. அப்போது அவர் மயிலையில் வஸிக்கிறார். பரம ஆப்தரான அவரை துக்கம் விசாரிக்கச் சென்றிருந்தேன்; அப்போது அவர் துக்கத்தை ஒருபடியாலும் மறக்கமுடியாமல் அழுதுகொண்டே சொல்லுகிறார், ஸ்வாமீ! நான் ஞானியுமல்லேன் விவேகியுமல்லேன்; மஹாபாரதத் தமிழாக்கத்தை அச்சிடும் வியாஜத்தினால் அந்த மஹாக்ரந்தத்தைப் பலகால் பரிபூர்த்தியாகப் பார்த்தவன்; பலபல தரும நுட்பங்களையறிந்திருக்கிறேன்; துக்கமடைந்த பலரைத் தேற்றியுமிருக்கிறேன். உபதேசங்களெல்லாம் ஸ்வாநுஷ்டானத்திற்குப் பயன்படாதனவே... இத்யாதி.

இளையவில்லிஸ்வாமி, குறைந்தபக்ஷம் இன்னும் இருபது ஸம்வத்ஸரகாலமாவது எழுந்தருளியிருக்கத் தக்கவர். நிரங்குசஸ்வதந்திரனான எம்பெருமான் செய்யுமவற்றையும் அவன் திருவுள்ளத்தையும் ஆரேயறிவார்? அவருடைய சரம கைங்கரியங்களெல்லாம் அவருடைய பெருமைக்குத் தக்கபடி சீரும் சிறப்பும் பொலிய நம்பெருமாள் ஸன்னிதியில் நடைபெற்றன. ஸ்வாமி திருவரங்கம் பெரியகோயிலிலே பரமபதித்தபடியால் சரமகைங்கரியங்களெல்லாம் அவ்விடத்திலேயே நடைபெற்றன.



திருவத்யயனத்தன்று திருவீதிகளில் இயல் நடத்துவதென்பது மிகப் பெரியார்களுக்காகும் ஒரு முறைமை. கோயில் ஸ்தலாசார்ய புருஷர்களுக்கு இது நடைபெறுவது. ஆனால் ப்ரக்ருதஸ்வாமி பத்திருபது வருஷங்களாகக் கோயில் ஸ்தலாசார்ய புருஷர்களோடொக்க மேம்பட்டு விளங்கினவராதலால் அவ்வாசார்ய புருஷர்களெல்லாரும் ஏகமுகமாய் ஸ்வாமிக்கு இந்த இயல் சிறப்பை நடத்தியேயாக வேணுமென்று மிக்க அபிநிவேசத்துடன் வெகு அற்புதமாக நடத்திவைத்தார்கள்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீமதுபய வே. கோயில் அண்ணன் ஸ்வாமி, ஸ்ரீமதுபய வே. ரங்காசார்யர் ஸ்வாமி, ஸ்ரீமதுபய வே. அரையர் ஸ்வாமிகள் உள்ளிட்ட பெரியோர்களெல்லாரும் ஸம்ப்ரமித்து நடத்தி வைத்த கோஷ்டியின் சிறப்பை ஸாக்ஷாத்தாக அநுபவிக்கப் பெற்றவர்கள் பாக்ய சாலிகள். ஸ்ரீராமாநுஜன் மூலமாக அவ்வநுபவத்தை ஆப்தர்களெல்லார்க்கும் பெறுவிக்கின்ற அடியேனும் ஒருவாறு பாக்யசாலியாகிறேன்.



வர்த்தமாந ஸ்ரீ ரங்க நாராயண ஜீயர் ஸ்வாமி நம்பெருமாள் ஸன்னிதியில் ஆஸ்தானத்திற்கு எழுந்தருள்வதற்கு முன்பு ஆழ்வார் திருநகரியில் பலவாண்டுகள் உத்தமாச்ரமியாகவே யெழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் நம் இளையவில்லி ஸ்வாமியும் அவ்விடத்திலேயே எழுந்தருளியிருந்தபடியால ஜீயர் ஸ்வாமி தம்முடைய ஆச்ரம கௌரவத்தைப் பாராட்டாமல் இவரிடத்திலே (ஈடு) பகவத்விஷய காலக்ஷேபம் செய்து போந்தார். அந்த ப்ரதிபத்தியையுங் கொண்டு தற்காலம் ஸ்வாமியின் சரம கைங்கர்யத்தைச் சிறப்பித்தது ஸ்வரூபாநுரூபமேயாயிற்று.

---

# வேதவிசாரப்பகுதியில் ஒரு விண்ணப்பம்.

— வைதிகர்கள் குறிக்கோள்க —

நாம் நடத்திவரும் ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையான வைதிக மநோஹரா விலும் இந்த ஸ்ரீ ராமாநுஜனிலும் சில மாதங்களாகப் பத்ரிகைதோறும் வேதத்திலுள்ள சிலபல பதங்களுக்கு ஸ்தலபேதேந ஸ்வரபேதம் காண்பதைப் பற்றின ஆராய்ச்சிகளைச் செய்துவருகிறோமென்பது பத்திரிகை நேயர்களுக்குத் தெரிந்ததே. இவ்வாராய்ச்சிகள் அபூர்வமானவையென்று மாச்சரியமற்ற பல வைதிகர்கள் உவந்தும் வியந்தும் தெரிவித்துவருகிறார்கள். திருப்பதி வித்யாபீடத்தில் வாழும் நியாயவேதாந்த வித்வான் உ.வே. நாவல்பாக்கம் (N. S) ராமாநுஜாசாரியர் அங்குள்ள கனபாடிகளான பல அத்வைதி வித்வான்கள் இவ்வாராய்ச்சிகளை மிகவுகப்பதாக அடிக்கடி தெரிவித்து வருகிறார். இஃது இங்ஙனே நிற்க.

திருக்குடந்தையில் வாழும் ஸ்ரீமான் அக்நிஹோத்ரம். ராமாநுஜதாதாசாரியர் ஸ்வாமி அடியேனுக்கு நெடுநாளைய நண்பர். அந்த ஸ்வாமி ச்ருதிஸ்ம்ரு

தீதிஹாஸ புராண மீமாம்ஸா கல்பஸூத்ர விசாரதராய் வேதவாசஸ்பதியாய் விளங்குபவராதலாலும், அந்த ஸ்வாமிக்கும் அடியேன் நெடுநாளாகப் பத்ரிகைகள் அனுப்பிக்கொண்டு வருவதாலும் சில நாள்களுக்கு முன்பு அவர்க்கு ஒரு விண்ணப்பமெழுதி யிருந்தேன் (அதாவது) அடியேன் பத்ரிகைகளில் பிரசுரித்து வருகிற வேதஸ்வர விமர்சங்களைக் கடாக்ஷிப்பதுண்டா? திருவுள்ளத்திற்கு ருசிக்கிறதா? என்று கேட்டிருந்தேன். அதற்கு பதில் கடிதம் (17—7—71ல் எழுதப்பட்டுக்) கிடைத்தது; அதில் தெரிவித்துள்ள விஷயமாவது—

''வைதிக ஸ்வரவிசார விஷயத்தில் அடியேனுடைய அபிப்ராயம் ப்ரஸித்தமானதே; ஸ்வரப்ரக்ரியாஸூத்ரங்களாலே ஸம்ப்ரதிபந்நமான விஷயத்தில் விசாரம் பிஷ்டபேஷணமே யாகிறதென்பதாக அடியேனுடைய கருத்து; ஆதலால் நான் இதில் புத்தியைச் செல்லவிடுவதில்லை'' என்பதாம்.

இக்கடிதம் கிடைத்தவன்றே நான் அவர்க்கு எழுதிய பதிலாவது—பிஷ்டபேஷணமாவது பிசைந்ததையே பிசைவது; பெரும்பாலும் ஜனங்கள் இதைத்தானே செய்து கொண்டிருக்கிறார்கள்; பிசையாததைப் பிசையும் பாக்கியம் கதாசித் சிலர்க்குக் கிடைக்கக்கூடும். இது நிற்க. உள்ளபடி அடியேன் ஜிஜ்ஞாஸுவாய்ப் பண்ணுகிற இரண்டு சங்கைகளை க்ருபையுடன் பரிஹரித்தருளவேணும். (என்றெழுதித்) தெரிவித்த இரண்டு சங்கைகளாவன—

(1) அபரம் என்கிற பதத்தைப்பற்றி முதல் சங்கை. (1-7.) *நஹ்யஸ்யா அபரம் சந ஜரஸா* என்ற ஓரிடத்தில் மட்டும் அபரம் என்கிற பதம் அந்தோதாத்தம்; (2-2,) *நாஸ்யாபரம் க்ருஹாந் தஹதி* (2-5.) *யத்யபரம் ப்ரதிக்ராஹீ ஸ்யாத்* (4-6) *அந்தரா பூர்வமபரஞ்ச கேதும்* (6-2) *ஸக்ருதுந்நீய நாபரமுந்நயேத* என்றுமிந்த நான்கிடங்களில் அபரம் ஏன்கிற அந்த பதமே ஆத்யுதாத்தமாக வந்திருக்கிறது. இந்த ஸ்வரபேதத்திற்கு என்ன நிமித்தமோ அதை க்ருபையுடன் அநுக்ரஹிக்கவேணும்.

2. இரண்டாவது சங்கையாவது) *அச்யுத:* என்கிற பதம். *மதாய ஸோ அச்யுதோ மாத்யோஸி* என்ற விடத்தில் ஆத்யுதாத்தம். இதே பதம் *பௌர்ணமாஸ்யாஞ் சாச்யுதோ பவதி* என்ற விடத்தில் அந்தோதாத்தம். இந்த ஸ்வர பேதத்திற்கும் நிமித்த பேதத்தை ஸ்வரப்ரக்ரியா ஸூத்ரங்களைக் கொண்டு அல்லது விமர்ச சக்தியால்) அநுக்ரஹிக்கவேணும். என்று விஜ்ஞாபித்திருந்தேன். இருபது நாளாகியும் இன்றுவரை பதில்கடிதம் கிடைக்கவில்லை. இந்த சங்கைகளை அந்த ஸ்வாமி பரிஹரிக்க வல்லரல்லர் என்று கனவிலும் கருதமாட்டேன். இன்றாக, நாளையேயாக, பரிஹரித்தருள்வர். பரிஹாரகமான ஸ்வரப்ரக்ரியா ஸூத்ரத்தைத் தெரிந்துகொண்டால் இனியாகிலும் பிஷ்டபேஷணம் பண்ணாமல் அபிஷ்டபேஷணம் பண்ணுவோம் என்பதே அடியேனுடைய அபிப்ராயம்.

விச்வரூபாநுவாகத்தில் *த்ருதீயம் ப்ரஹ்மஹத்யாயை* என்ற விடத்திலும், *அதிதி: புத்ரகாமாநுவாகத்தில் *ஸ த்விதீயமபசத்* என்ற விடத்திலும் த்விதீய த்ருதீய பதங்களின் ஸ்வரபேதத்திற்கு அர்த்த பேதம் நிமித்தமாக அறியக் கிடக்கிறாப்போலே அபர அச்யுத பதங்களிலும் ஸ்வரபேத நிமித்தமாக ஏதேனும்

அர்த்தபேத முண்டோ? என்பதுதான் ஜிஜ்ஞாஸிதம். வித்வான்களான வைதிகர்களில் யார் விமர்சித்துத் தெரிவித்தாலும் க்ருதார்த்தனுவேன்.

பாணிநீயவ்யாகரணத்தில் வைதிக ப்ரக்ரியா என்றும் ஸ்வரப்ரக்ரியா என்றுமிருப்பதை நாம் அதிகரித்தே யிருக்கிறோம் பட்டபாஸ்கர பாஷ்யத்தில் பெரும்பான்மையான பாகம் ஸூத்ரங்களை யெடுத்துக் காட்டுவதேயாகும். அத்தகைய ஸூத்ரங்களினுல் நாம் தெளிவுபெறு மிடங்கள் பலவுண்டு. நம்முடைய தைத்திரீய சாகைக்குப் பயன்படாத ஸூத்ரங்களும் பலவுண்டு (ஸித்தாந்த கௌமுதியில்) அவ்யயீபாவப்ரகரணத்தில் *இவேந ஸமாஸோ விபக்த்யலோபச் ச* என்றொரு வார்த்திகத்தையிட்டு "ஜீமுதஸ்யேவ" என்று உதாஹரணம் காட்டப்பட்டுள்ளது. இது எந்தசாகையில்? என்பதை வைதிகர்கள் ஆராயவேணும். *வாகர்த்தாவிவ* என்கிற ரகுவம்ச உபக்ரம ச்லோகத்திலும் இந்த வார்த்திகம் பயன் படுவதுண்டோ? இத்யாதி விஷயங்களைப்பற்றி மிக விரிவாகத் தெரிவிக்க வேண்டியவை பலவுண்டு; பல ஸந்தர்ப்பங்களில் தெரிவித்துமிருக்கிறோம். தமிழில் "ஸ்வரபேதக் கண்ணுடி" என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்வரபேத ஸித்தாஞ்ஜநமென்றும் மகுடமிட்டு நாம் ஆராய்ச்சி செய்துவருவது அக்நிஹோத்ரம் தாதாசார்ய ஸ்வாமி திருவுள்ளம்பற்றுகிறபடி பிஷ்டபேஷணமன்றென்பதை நிர்மத்ஸரர்கள் அறிந்து கொள்ளக்கடவர்கள்.

கிம் பஹுநா? அபரம் என்கிற பதத்திலும் அச்யுத: என்கிற பதத்திலும் ஸ்தல பேதேந ஸ்வரபேதம் விளைந்திருப்பதற்கு நிமித்த நிரூபணம் செய்ய வேணுமென்று நாம் பிரார்த்தித்திருக்கிறோம். இந்தச் சிறு பிரார்த்தனையை நிறைவேற்றி விட்டால் பிஷ்டபேஷண தத்வம் விளங்கிவிடும். (தொடரும்.)

---

ஸ்ரீ:

## சின்ன காஞ்சீபுரம் ஸன்னிதி வீதியில் வேதபாடசாலை.

ஸ்ரீமான் ஸேட் லால்குந்தன்மல் தமானி யென்கிற வட இந்தியா தார்மிகர் சின்ன காஞ்சீபுரம் ஸன்னிதி வீதியிலுள்ள ஆரணி ஜாகீர்தார் மாளிகை என்கிற விடத்தை விலைக்குவாங்கி அதில் வேதபாடசாலையை ஸ்தாபித்து 20, 25 வருஷ காலமாக சிறப்பான முறையில் நடந்துவர ஏற்பாடு செய்திருப்பது அனேகமாய் அனைவருமறிந்ததே யாகும். முதலில் சிலவாண்டுகள் வேதாத்யயனம் மட்டுமே நடந்துவந்தது ஐந்து வருஷகாலமாக வேதத்தோடுகூட திவ்ய ப்ரபந்தமும் ஸ்தோத்ர பாடங்களும் கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஸன்னிதி வீதியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ. உ. வே. மலைமேல் (ராஜா) ராஜகோபாலாசாரியர் ஸ்வாமியின் மேற்பார்வையில் ஆதியிலிருந்து நடந்து வந்ததிப்பாடசாலை. அந்த ஸ்வாமி சென்ற ஸம்வத்ஸரத்தில் திருநாடலங்கரித்தபடியால் அதுமுதலாக ஸ்ரீமான் மலைமேல் குட்டிஸ்வாமி என்கிற ஸ்ரீநிவாஸாசாரியருடைய மேற்பார்வையில் ஒழுங்காக நடந்துவருகிறது.

ஸ்ரீமான் உ வே உபயவேத கண்டீரவ. தி. வி. சிங்கராச்சாரியர் ஐந்து வருஷ காலமாக இப்பாடசாலையில் உபாத்தியாய பதவியை அலங்கரித்து வருகிறுர்.

ஸமீபகாலத்தில் (4-7-71ல்) இப்பாடசாலைக்கு வருஷாந்தக் கொண்டாட்டமொன்று நடைபெற்றது. அச்சமயத்தில் சேகரிக்கப்பட்ட உருவப்படம் இங்கு வெளியிடப்பட்டுள்ளது. இப்பாடசாலைக்குத் தலைவரான ஸேட் நமக்கு மிகவும் ஆப்தராகையாலே கல்வியின் அபிவிருத்தியை கவனித்துக் கொள்ளுமாறு நம்மிடம் கோரியிருப்பதால் நாமும் உரிய காலங்களில் கவனித்து வருகிறோம். இந்த உருவப்படத்தில் கீழ் வரிசையில் உட்கார்ந்திருப்பவர்கள் (1) V. கேசவன் (2) உபாத்தியாயஸ்வாமி, (3) K. K. A. அனந்தாழ்வான், (4 நிர்வாஹக ஸ்வாமி (மலை. குட்டி ஸ்வாமி), (5) K. M. ஸ்ரீதரன்.

மேலே நிற்பவர்கள்:—(1) S. ராமாநுஜன், (2) K. K. A. பத்மநாபனென்கிற செல்லப்பா, (3) T. T. லக்ஷ்மீநரஸிம்ஹன், (4) K. B. தேவராஜன், (5) K. B. ஸ்ரீதரன், (6) K. K. A. ராகவன், (7) K. B. ஸ்ரீநிவாஸன், (8) M. V. R. ராமாநுஜன். இந்த வித்யார்த்திகளோடு உபாத்யாயரும் நிர்வாஹகரும் பாடசாலை ஸ்தாபகரும் நீடூழி வாழவேணுமென்று மங்களாசாஸனம் செய்கிறோம். P. B. A. *

---

## ஸ்ரீ வைஷ்ணவவுலகின் தௌர்ப்பாக்யம்.

அப்யேதத்ர விரோதிக்ருத்யவஸதே கல்பே காலீரம் ஶுபே
க்ருஷ்ணே ஹ்யாயமிகேதியௌ ஸந்நிதினே வாஸரம் ஶ்ரவிஷ்டாபாந்தி ।
ஶ்ரோத்ரியாந்வயஜூஷ்வாரியிவிஷ்ணு வித்வாந்நிதிவிஶ்ருதஃ
ஶ்ரீமாந் வேங்கடஸத்ஸுராலஹஜத ஸ்வாசார்யல்வாதாம்பஜஜ்ஜ ॥
விரோதிக்ருதி கக்ஷ்டே ஶ்ரீ திஷ்யே தியாவாஷிஶே
ஸத்வேநஸ்ரஷிநாந்தேத மஸதி ஹஸ்தயோஷீஜ்ரஹே ।

ஜயதி விதிதவைபவ: ஸ்ரீமத்வேங்கடார்யஸூர்ய:
ஸுமஹத மம்போதேஷம் ஸகலவிபுதமோத: ||

காவ்யப்ராக்ஸஹிஜநவேங்கடார்யஸூரி:
ஸ்ரீவ்யாஸ: க்ஷிதிதலஸாஸ்த்ரஸாஸ்த்ரஞாஸ |
ஸாஸாஸா ஸவிஸயஸ்தவைச, தவிஸா
ஸம்ஜாதா ஸவதி கதம் ஸ்ரீகாலவாதம் ||

அதீதமத்யாபிதமார்ஜிதம் யசோ விசாலவித்வத்விசேஷலக்ஷ்யே |
ஸ்ரீணாஹிஸாஸம் ஸ்ரீஸ்ரீவேங்கடார்யம் க்ஷமாஸ்வ வஸ்யே ஸாநயந்திர்த்தாத் ||

நிகழும் விரோதிக்ருத் ஸம்வத்ஸரம் ஆடிமீ 22௳ (7-8-71) சனிக்கிழமை மாலை ஸ்ரீமதுபய வே நியாயவேதாந்த வித்வான் காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி மயிலையில் தமது திருமாளிகையில் திருநாடலங்கரித்த செய்தியைத் தெரிவிக்க மிக மிக வருந்துகிறோம். ‘தஸ்மிந் அஸ்தமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே, ஜ்ஞாநாந்யஸ்பீபவிஷ்யந்தி’’ என்னத்தக்க வ்யக்தி விசேஷம் ‘‘அதீத மத்யாபிதம் ஆர்ஜிதம் யச:’’ என்கைக்கு ப்ரதம லக்ஷ்யபூமியான மஹான் மண்ணவரைப் பெருந்துயர்க்கடலில் வீழ்த்தி விண்ணவர்க்கு விருந்தாயினர். இந்த ஸ்வாமியினுடைய ஸ்தானத்தைப் பரிபூர்த்தி செய்யவல்லாரில்லை யென்பது அதிசயோக்தியன்று.

இங்ஙனம், ஸ்ரீ, அண்ணங்கராசாரியன்.

---

## அஸாராஸ்ப ஸாரவிவாதத்தில் அடியேனுடைய விண்ணப்பம்.

*அஸாரமல்பஸாரஞ்ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத்* இத்யாதி ப்ரஸித்த ச்லோகத்தின் பொருள் விவரணத்தைப்பற்றி (சென்ற ஐப்பசி மாதம் முதலாக)ச் சில வித்வான்களுக்குள் அபிப்ராய பேதம் விளைந்து க்ரந்த லேகன ப்ரதிலேகனங்களும் நடந்துவருவதை ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையினால் அடியேன் ஸ்தூலமாக அறிந்திருக்கிறேன். ஏறக்குறைய ஒருவருஷ காலமாகவே அடியேனுக்கு நேத்ரபாடவம் குன்றி யிருப்பதை ஸ்ரீ ராமாநுஜனில் பலகால் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அதை இங்கு மறுபடியும் சுருக்கமாகத் தெரிவிக்கிறேன். அடியேன் எழுதுவதற்கு எவ்விதமான இடையூறும் விளையவில்லை. நாடோறும் 30, 35 பக்கங்களும் எழுதி வருகிறேன். வரும் தபால்களைப் பெரும்பாலும் கார்யஸ்தர்கள் வாசித்துக்காட்டியே தெரிந்துகொள்ளுகிறேன். அச்சிட்ட ஏடுகளை ஆவச்யகதைக்கு ஏற்ப சிரமப்பட்டு வாசிக்கிறேன். வாசிப்பதில் சிரமப்பட நேர்ந்தால் வாசிப்பதை உடனே நிறுத்திவிட வேண்டியதென்று டாக்டர்களின் கட்டளையுமுண்டு அதனால், நிஷ்கர்ஷம் – நிகஷம் முதலியவற்றில் அடியேன் இன்றளவும் கண்செலுத்தினவனல்லேன். ஸுதர்சந பத்ரிகை வரும்போது பிரித்துப் பார்க்கையில் ஏடுகள் வளர்ந்திருக்கின்றன வென்று மட்டும் க்ரஹித்தவனடியேன்.

10—8—71 தேதியாகிய இன்று ஸ்ரீ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமியிடமிருந்து கிடைத்த ஸ்ரீ முகத்தில் நான்கு பக்கமுள்ள சிறிய விளம்பரமொன்று இருந்தது. அதில் அடியேனுடைய ப்ரஸ்தாவமிருப்பதாகத் தெரியவந்ததனுல் அந்த இடத்தை மட்டும் ஊன்றி வாசித்தேன். ஸ்ரீமதுபய வே. மதுராந்தகம் ஸ்வாமி எழுதியிருப்பது அதில் அநுவதிக்கப்பட்டிருக்கிறது (அதாவது) "ஸ்ரீ.உ.வே. ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியுடன் ஸமீபத்தில் ப்ரக்ருத சர்ச்சாவிஷயமாக ப்ரஸ்தாவம் ஏற்பட்டபொழுது பூஷண பாஷ்யமானது ஸம்ப்ரதாயத்தை யநுஸரித்ததன்று என்பதைத் தாம் ஏற்கனவே பிரசுரம் செய்திருப்பதாய் ஸாதித்தார் அடியேனுடைய ஸித்தாந்தமும் அதுவே. பாஷ்யம் அஸாம்ப்ரதாயிகமென்று தாம் வெளியிட்டதை விளக்க ஸம்மதித்தால் அந்த ஸ்வாமியும் மத்யஸ்தபதம் வஹிக்கலாரும்'' என்பதாக

இது பச்சைப்பசும்பொய்என்பதை உலகமறியவிளக்குகிறேன். ஸ்ரீமதுராந்தகம்ஸ்வாமிசென்ற சித்திரைமாதம் முடிவில் ஏதோ பந்துக்ருத்யமாகக் காஞ்சிக்கெழுந்தருளி ஒருவாரமிருந்தார். அடிக்கடி சந்திக்க நேரிட்டது. சித்திரை மீ முடிவுநாளன்று வெள்ளிக்கிழமை, தாயாருடைய புறப்பாட்டில் இயல்சாத்தியான பிறகு, அன்று திருமூலமாதலால் மணவாளமாமுனிகள் ஸன்னிதிக்கு விடைகொள்வதற்காக ஒருபுறம், தங்கியிருந்தேன். அங்கு மதுராந்தகம் ஸ்வாமி யெழுந்தருளி நான் தங்கியிருக்கிற காரணத்தைத் தெரிந்துகொண்டார். தாமும் மாமுனிகள் திருநக்ஷத்ரோத்ஸவம் ஸேவிக்க வருவதாக ஸாதித்து, கூடவே வந்து இரண்டு மணிகாலம் கோஷ்டியை யநுபவித்தார். பலவார்த்தைகளில் * அஸார அல்ப்ஸார வார்த்தையும் வந்ததுண்டு; அப்போது அடியேன் விஜ்ஞாபித்ததிவ்வளவே; "ஆசார்ய ஹ்ருதயத்தில் "வேதஸாரோபநிஷத்ஸாரதராநுவாக ஸாரதமகாயத்ரியில்'' என்று ஸ்பஷ்டமாக அருளிச்செய்திருப்பதைத்தான் அடியேனறிவேன்; ஸ்ரீவசன பூஷண மீமாம்ஸாபாஷ்யத்திலுள்ள விவரணம் நினைவில்லை; இப்போது நிகழும் க்ரந்தசர்ச்சைகளையுமறியேன்'' என்று. "மீமாம்ஸாபாஷ்யம் அஸாம்ப்ரதாயிக மென்பதை ஏற்கெனவே நான் பிரசுரம் செய்திருக்கிறேன்" என்று அடியேன் சொல்லியிருந்தால் "எங்கே எப்போது எதற்காக பிரசுரித்திருக்கிறீர்'' என்று இந்தஸ்வாமி கேளாமலிருப்பரா? "அது எனக்கும் தெரியுமாகையால் கேட்கவில்லை'' என்பர். தெரியுமாகில் இன்னவிடத்திலென்பதை 15-8-71க்குள் வெளியிடட்டும். அடினேிடத்தில் அபத்தப்ரலாபம் விலை செல்லாது.

முடிவாகச் சொல்லுகிறேன் ப்ரக்ருத சர்ச்சையில் அடியேன் எந்தவிதத்திலும் ஸம்பந்தப்பட விரும்பவில்லை. ஏறக்குறைய நாற்பது வருஷகாலமாக ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியை நோக்கிப் பலநூல்கள் எழுதியிருக்கிறேன். அவையெல்லாவற்றையும் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி ஸ்தாபித்தருளியிருக்கிற ஸ்ரீகோசநிலயத்திலும் ரங்கவிலாஸபுஸ்தகாபணங்களிலும் கு சி பாடசாலை லைப்ரெரியிலும் அபேக்ஷையுள்ளவர்கள் காணலாம். அந்த க்ரந்தங்களுக்கு ஏதேனும் விடைவருமோ? என்கிற ஒன்றை மட்டுமே அடியேன் பார்த்து நிற்பவன். விடைவெளிவந்தால் அன்று முதல் இவர்க்கு சிஷ்யனுயிருப்பேனென்பதை மீண்டும் சபதம்செய்து நிற்கிறேன். P.B.A.

# சென்னைமாநகரில் ஷஷ்ட்யப்தபூர்த்தி



சென்னையில் எழும்பூரில் பிரபல அட்வொகேட்டாக விளங்கிவரும் ஸ்ரீமதுபயவே V.N. வேங்கடவரதாசாரியர் ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரான ஸ்ரீமான் V. ஸம்பத்து சக்ரவர்த்தியாசாரியருக்கு நேற்று ஆனிமீ 24 தேதி (8—7—1971) வியாழக்கிழமை பூராட நக்ஷத்திரத்தன்று காலை சுபயோக சுபலக்கினத்தில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் அவருடைய திருமாளிகையான வேதவிலாஸ் பங்களாவுக்கு அருகிலுள்ள "ஸிந்துஸதனில்" விசேஷ வைபவம் பொலிய நடைபெற்றது. கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான திவ்ய தேசங்களிலிருந்தும் மற்றும் பல ஸன்னிதிகளிலிருந்தும் பஹுமான விசேஷங்கள் ப்ராப்தமாயின.

அன்று திருவல்லிக்கேணியில் அழகிய சிங்கருடைய ப்ரஹ்மோத்ஸவத்தில் திருத்தேர்த் திருநாளாதலால் அவ்விடத்திலிருந்தும் சிறப்புகள் வந்தன. வைதிக ப்ரக்ரியைகளில் ஒன்றும் குறைவில்லாதபடி நடந்தேறியது. உற்ருருறவினர் ஆப்தர்கள் பெரியமனிதர்கள் குழாங்கூடி நம் V. N. V. ஸ்வாமியின் பெருமைக்குத் தக்கபடி நடத்திவைத்த அதிசயத்தை அடியேன் நேரில் அநுபவிக்கப் பெற்றது பாக்யவிசேஷம்.

மூன்று நான்கு வருடங்களுக்கு முன்பு சதாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளின நம் வேங்கடவரதாசார்யஸ்வாமிக்கு அனேக பாக்யங்கள் வாய்த்திருப்பது போல திருக்குமாருடைய ஷஷ்டியப்த பூர்த்தியை உடனிருந்து அநுபவிக்கப் பெறுவதும் பெரியதொரு பாக்ய விசேஷமன்றோ. ஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் மூவர். இப்போது ஜ்யேஷ்ட குமாரருடைய ஷஷ்டியப்த பூர்த்தியை அநுபவித்தது போல மற்றுமுள்ள திருக்குமாரர்களுடையவும் ஷஷ்டியப்தபூர்த்தி சதாபிஷேகாதி

மஹோத்ஸவங்களை யநுபவித்துக்கொண்டு "வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே" என்று நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்தருளினபடி கடல்சூழ்ந்த மண்ணுலக





மெங்கும் புகழோங்க நீடுழிகாலம் வாழவேணுமென்று பெரியார்கள் பலரும் போற்றினார்கள், "தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந் தழைக்கவே."—P.B.A. ... *

# திருவல்லிக்கேணி—வேதவேதாந்தவர்த்தினியின் நிகழ்ச்சிகள்

— (ஸபையின் தலைவர்கள் தெரிவிப்பது) —

திருவல்லிக்கேணியில் ப்ரதிஷ்டாபிதமாகியுள்ள வேதவேதாந்தவர்த்திநீ ஸபையின் வார்ஷிகோத்ஸவம் (அதாவது நூற்றிரண்டாவது வருஷக்கொண்டாட்டம்) 14—8—71 ௳ முதல் 22—8—71 ௳ வரையில் நடைபெறவிருக்கின்றது. இந்நாட்களில் வித்வான்களின் உபந்யாஸங்கள் தினப்படி நடக்கும். 21—8—71 வரையில் ஸ்ரீவானமாமலை மடத்தில் மாலை 6 மணிக்கும், கடைசிநாள் ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதி திருவாய்மொழி மண்டபத்தில் 3 மணிக்கும் கீழ்க்காணும் விவரப்படி நடக்கும்.

14—8—71 ஸ்ரீஉ.வே. தேசி. ரங்கராமாநுஜய்யங்கார் ஸ்வாமி
—உபாயமும் உபேயமும் ஒன்றே

15—8—71 „ வேளுக்குடி K. வரதாசார்ய ஸ்வாமி
—அவதாரத்தின் மெய்ப்பாடு

16—8—71 „ ஒழப்பாக்கம். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி
—(ஸ்ரீபாஷ்யத்தில்) கர்த்ரதிகரணம்

17—8—71 „ பிள்ளைலோகம். பாஷ்யகாராசார்ய ஸ்வாமி
—"மெய்ம்மைப்பெருவார்த்தை"

18—8—71 „ பிள்ளைலோகம். ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி
—"புருஷகாரமும் ஆசார்யக்ருத்யமும்"

19—8—71 „ விஞ்சிமூர். தாதாசார்ய ஸ்வாமி
—"மற்றைநங்காமங்கள்மாற்று"

20—8—71 „ திருவண்காரணை. பரவஸ்து ராஜகோபாலாசாரியர்ஸ்வாமி
—"ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கள்"

21—8—71 „ திருமலைநல்லான். ராமக்ருஷ்ணையங்கார் ஸ்வாமி
—"தைத்திரீய ஸாரம்"

22—8—71 „ ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
—"உபயவேதாந்தத்தின் உயிர்"

கடைசி நாளாகிய 22௳ ஞாயிற்றுக்கிழமையன்று 3 மணிக்கு வித்யார்த்திகளின் பரீக்ஷைகளும் ஸன்மானங்களும் முடிவுபெற்று 4 மணிக்கு உபந்யாஸம் தொடங்கப்படும். ஆஸ்திகர்கள் அனைவரும் 14௳ முதல் எல்லா நாட்களிலும் நிகழ்ச்சிகளில் அந்வயித்து ஸபையைச் சிறப்பிக்க வேணுமென்று பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

இப்படிக்கு,

C. S. பார்த்தஸாரதி ஐயங்கார், B.A., B.L.,

(ஸபையின் நிரந்தர அக்ராஸனர்)

திருவல்லிக்கேணி.

# ப்ரக்ருத ஸபாவிஷயத்தில் அடியேன்செய்யும் விண்ணப்பம் (P. B. A)

வேதவேதாந்தவர்த்திநீ என்கிற இந்த ஸ்தாபனம் ஏற்பட்டு நூற்றிரண்டு வருடங்கள் கடந்துவிட்டனவென்பதை வாசகர்கள் அறிந்துகொண்டிருக்கிறீர்கள். 1870ஆம் வருடத்திற்கு முன்னே இஃது ஆரம்பமாயிற்று என்றபடி. 1905ஆம் வருஷம் முதலாக இந்த ஸபையின் நிகழ்ச்சிகளை அடியேன் நன்கறிவேன். அக்காலத்தில் ஸ்ரீபெரும்பூதூர் பாடசாலையில் ஏறக்குறைய நூறு வித்யார்த்திகள் வாசித்துக்கொண்டிருந்தார்கள். காஞ்சீ பாடசாலைகளிலும் திருமழிசை பாடசாலையிலும் முப்பது நாற்பது வித்யார்த்திகள் வாசித்துவந்தார்கள். திருநாராயணபுரம் பெங்களூர் மைசூர் முதலான விடங்களிலும் ஸம்ஸ்க்ருத வித்யாபிவிருத்தி விசேஷமாக நடந்துகொண்டிருந்த காலமது. எல்லாவிடத்து வித்யாசாலைகளிலிருந்தும் நான்கு சாஸ்த்ரங்களிலும் உபய வேதாந்தங்களிலும் பரீக்ஷைகொடுக்க ஐம்பது வித்யார்த்திகளுக்குமேல் வந்துகொண்டிருந்ததை ஐந்தாறு வருஷகாலம் தொடர்ச்சியாக நேரில் அநுபவித்திருக்கிறேன். எப்போதும் ஆவணி மாதத்தில்தான் இந்த ஸபை (திருவல்லிக்கேணியில்) நடைபெறுவது வழக்கம். உபந்யாஸம் செய்வது என்கிற பத்ததி அப்போது இருந்ததாக நினைவில்லை. அக்காலத்தையும் இக்காலத்தையும் சேர நினைக்குமளவில் ஸம்ஸ்க்ருதபாஷைக்கு இவ்வளவு துர்தசையா! என்கிற வருத்தம் மிகமிகவுண்டாகிறது. இது பரிஹாரமடைவதற்கு மார்க்கமிருப்பதாகவும் தெரியவில்லையே.

ஆங்கில கலாசாலைகளில் வாசிக்கும் மாணாக்கர்கள் [உயர்தர வகுப்பில் சேர்ந்தவர்கள்] ஒருவர்க்கொருவர் பேசும்போதும் கடிதங்களெழுதிக்கொள்ளும் போதும் ஆங்கில பாஷையையே உபயோகப்படுத்தக் காண்கிறோம். 'இவர்களுக்குத் தமிழே தெரியாது போலும்' என்றுகூட நினைக்க நேர்கின்றது. ஸம்ஸ்க்ருத பாஷைக்கு அப்படிப்பட்ட ஸௌபாக்யம் இந்த யுகத்தில் இனி நேருமா? என்று சோதிடம் கேட்கவேண்டியிருக்கின்றது. சப்தமஞ்ஜரி, அமரம் தாதுபாடம் வாசிப்பதென்கிற பத்ததியே இக்காலத்தில் அரிதாய்விட்டதே. இத்தகைய பயனற்ற பேச்சுக்களில் நின்றும் நிற்போம். ... ... .. ... *

---

# வரதராஜஸ்தவ ஸ்ரீஸ்தவங்களுக்குத் தமிழ்ச்செய்யுள்

கூரத்தாழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவங்களுள் வரதராஜஸ்தவம் நூறு சுலோகங்கள் கொண்டது. ஸ்ரீஸ்தவம் பன்னிரண்டு சுலோகங்கள் கொண்டது. இவ்விரண்டையும், திருநெல்வேலியில் வாழும் ஸ்ரீஉவே. பக்ஷிராஜய்யங்கார் (அட்வகேட்) அவர்கள் தமிழ்ச் செய்யுட்களாக்கி நமக்கு அனுப்பியுள்ளார். இவர் சிறந்த தமிழ்க்கவியென்பதை அறியாதாரில்லை. இப்போதிவர் செய்திருக்கும் தொண்டு மிகச்சீரியதும் மிக வியக்கத்தக்கதுமாகும். இவ்விரண்டுஸ்தவங்களும் ஸ்ரீராமாநுஜன் மூலமாக முறையே வெளிவரும் அடுத்தவிதழிலிருந்து. ... *

---

# கண்ணும் அண்ணும் பேசியவை

(ஸ்ரீராமாநுஜன் 273ன் தொடர்ச்சி)

கண்ண—"இப்போது நான் காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்க்கவேண்டி யிருப்பதால் மறுபடியும் மாலைப்பொழுதில் நாமிருவரும் கலந்துபேசுவோம்" என்று சொல்லிப்போனேனல்லவா? மறுபடியும் இதோ பேசவந்துவிட்டேன்; பேசுவோமா?

அண்ண—கண்ண! கன்றுகள் மேய்க்கவேண்டிய காரியம் ஒன்றுதானா உனக்கு; "ஸாயம் ஸ்வயம் ப்ரதிக்ருஹம் பசுபந்தநார்த்தம் கச்சந்தம் அச்யுதசிசும் ப்ரண தோஸ்மி நித்யம்" என்று முனிவர்களெல்லாரும் அநுஸந்தானம் செய்துகொண்டிருக் கிறார்களே; மனைதோறும் சென்று மாடுகளைக் கட்டுவதும் கறப்பதும் முதலான காரியங்களும் உனக்குண்டே; அவற்றையெல்லாம் விட்டிட்டு என்னோடு பேச வருவதற்கு உனக்கு எப்படி அவகாசம் கிடைத்தது?

கண்ண—"மாடுகளைக் கட்டுவதும் கறப்பதும் முதலான காரியங்களு மென்கி றாயே; முதலான என்ற சொல்லால் இன்னும் உனக்கு விவக்ஷிதமானவை எவை? ஒளிக்காமல் சொல்லு பார்ப்போம்.

அண்ண—உன்னிடத்தில் ஒளிக்கவேண்டியதென்ன இருக்கிறது? மஹர்ஷி கள் மூடி மறைத்து வைத்தவற்றையெல்லாம் எங்கள் ஆழ்வார்கள் வெட்ட வெளிச்சமாக்கி வைத்திருக்கிறார்களே; உன்னுடைய சிறுச் சேவகங்களை மற்றை யாழ்வார்களிற் காட்டிலும் பெரியாழ்வாரன்றோ அதிகமாகப் பேசியுள்ளார்; அவர் பேசியிருப்பவை யெல்லாம் உண்மைதானா என்று உன்னையே கேட்டுத் தெரிந்து கொள்ள விருப்பமெனக்கு; கேட்கட்டுமா?

கண்ண—தாராளமாகக் கேள்; உண்மையானவற்றை உண்மை யென்கிறேன், பொய்யானவற்றைப் பொய்யென்கிறேன் அவ்வாழ்வார் யசோதையின் வேடம் பூண்டு அவள் சொல்லுகிற பாவனையில் ஏதேதோ பேசி வைத்திருக்கிறாரென்பது எனக்கும தெரியும்; நீ கேட்கவிரும்பியதைக் கேள்.

அண்ண—அப்பா! அப்படிச் சொல்லிவிடாதே; ஏதேதோ பேசிவைத்திருக் கிறார் பெரியாழ்வார் என்கிறாயே; அவ்வாழ்வார் ஏதேதோ பேசிவைப்பவரல்லர்; அவருடைய பாசுரமொன்றுகேள்; * உன்னுடைய விக்கிரமம் ஒன்றொழியாமலெல் லாம், என்னுடைய நெஞ்சகம்பால் சுவர்வழி யெழுதிக்கொண்டேன் * என்று துணிந்து பேசினவர் அவர் ஒருவர்தானே மஹர்ஷிகளின் ஸாக்ஷாத்காரத்திற்கு இலக்காகாதவற்றையும் ஸாக்ஷாத்கரித்துப் பேசுகிறவர் அவர் என்று கொண்டாடு கிறார் பெரியவாச்சான்பிள்ளை. அவர் மற்றுமுள்ள ஆழ்வார்களையெல்லாம் சிறிய வர்களாக்கித் தாமே பெரிய ஆழ்வாரா யிருக்கிறார்; அவர் ஏதேதோ சொல்ல மாட்டார்; அவர் சொன்னவற்றில் ஒன்று கேள்.

கண்ண—ஒன்றென்ன? பலவுங்கேட்க விரும்பியேயன்றோ உன்னோடு பேச வந்திருக்கிறேன். கீதையில் நான் * ஜந்ம கர்ம ச மே திவ்யம் * என்று சொல்லி யிருக்கிறேன்; என்னுடைய பிறப்பும் செயல்களும் பிறர்க்கு எப்படியிருந்தாலும்

[மே திவ்யம்] எனக்கு திவ்யமானவை யென்றன்றோ சொல்லியிருக்கிறேன். க்ருஷ்ணத்ருஷ்ணுதத்வமென்று பேர்படைத்த நம்மாழ்வாரும் "அதுவிதுவுது என்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்" என்கிறார். கூரத்தாழ்வானும் * இங்கிதம் நிமிஷதஞ் ச தாவகம் ரம்யமத்புதம் அதிப்ரியங்கரம் * என்கிறார். அதெல்லாமிருக்கட்டும்; நீ கேட்கவிரும்பியதைக் கேள்.

**அண்ணா**—அந்த பெரியாழ்வார் உன் சரிதைகளிலே "வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த அன்பாவுன்னையறிந்துகொண்டேன்" என்று யசோதை சொன்னதாகச் சொல்லியிருக்கிறார். வடவண்டையகத்திற்குச் சென்று ஒரு கன்னியை நீ ஏதோ செய்ததாகச் சொல்லியிருக்கிறாரே, என்ன செய்தாயென்று நான் கேட்கவில்லை; அது உனக்கே தெரிந்ததாயிருக்கட்டும்; அது உண்மைதானா? என்று இவ்வளவே கேட்கிறேன்.

**கண்ணா**—ஆழ்வார் பாசுரங்களை நீ சந்தை சொல்லித் திருவை சொல்லிக் கண்டபாடம் செய்துவைத்திருக்கிறாய்; நான் அவற்றைக் கேட்டுக் கேட்டு ஓரெழுத்து விடாமல் தரித்து வைத்துக்கொண்டிருக்கிறேன். ஒரு பாட்டில் ஒரு துண்டையெடுத்து நீ சொல்லுகிறாய்; முழுப்பாட்டையும் நான் சொல்லுகிறேன் கேள். இது ஸம்பாவிதமா அஸம்பாவிதமா என்பதை நீயே ஆராய்ந்துகொள், அந்தப் பாசுரமாவது—* பொன்பேலே மஞ்சனமாட்டி அமுதூட்டிப் போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச் சாடி வடக்கிலகம் புக்கிருந்து, மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த, அன்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மம்தரவே * என்பது. அண்ணா! நான் சொன்னது சரிதானே. என்தாய் என்னை நீராட்டித் தொட்டிலில் படுக்கவைத்துப் போனாளாம்; அவள் திரும்பி வருவதற்குள் நான் சகடபங்கம் பண்ணிவிட்டு வடவண்டையகத்துக் கன்னியை ஏதோ செய்துவிட்டேனாம். ஆண்டாள் என்னை * ஏலாப்பொய்களுரைப்பானைக் கொல்லுகிறாள்; நீயே பார், இந்தப் பெரியாழ்வார் பாசுரத்தைவிட ஏலாப்பொய் உலகத்தில் வேறு உண்டாவென்று பார்; நான் சகடபங்கம் பண்ணினது நான் பிறந்த ஏழாவது மாதத்திலென்று யசோதை சொன்னதாகத் திருமங்கையாழ்வார் சொல்லிவைத்திருக்கிறார்; பெரியதிருமொழியில் (10-7-9) * ஈடும் வலியுமுடைய இந்நம்பி பிறந்த ஏழுதிங்களில்...... கிடந்து திருவடியால் மலைபோலோடுஞ்சகடத்தைச் சாடிய பின்னை உரப்புவதஞ்சுவனே * என்பது அந்தப்பாசுரம். ஏழாவது மாதத்தில் நான் ஒரு கன்னியை வேற்றுருவம் செய்ததாக ஒரு ஆழ்வார் சொல்லிவைப்பதும், அதை உன்போல்வார் குழாங்கூடி என்னெதிரே பாடுவதும் வெகு நன்றாயிருக்கிறது; இது உண்மைதானா! என்று நீ கேட்பது இன்னமும் வேடிக்கைதான்.

**அண்ணா**—இந்தப்பாசுரம் பொய்யாகச் சொன்னதென்று உன் கருத்தாகில் இதை ஏதுக்கு நீ கண்டபாடம் செய்துவைத்திருக்கிறாய்; தவிரவும் கோவில்களிலும் க்ருஹங்களிலும் உகந்து திருச்செவி சாத்துகிறாயே ஏன்? "ஜாரசோரசிரோமணே! சோரஜார சிகாமணே!" என்று பல்லாயிரவர் கூடித் தெருவேறத்திரிந்து பஜனை செய்தால் உள்ளங்குளிரக் கேட்கிறாயே, ஏன்?

கண்ணு—அண்ணு! என்னேடு நீ பேச ஆரம்பித்தபோது அவதாரத்தைப் பற்றிக் கேட்கத் தொடங்கினய்; அதில் நீ இன்னும் எவ்வளவோ கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவையுண்டு; அதைவிட்டு இது என்ன கேள்வி? அர்ஜுனன் என்னேடு மிகவும் பழகினவன். என்னைப்பற்றிப் பலரிடம் பலவும் கேட்டவன். (கீதை 10—12) * பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந், புருஷம் சாச்வ தம் திவ்யம் ஆதிதேவம் அஜம் விபும்; ஆஹுஸ் த்வாம் ருஷயஸ் ஸர்வே தேவர் ஷிர் நாரதஸ் ததா, அஸிதோ தேவலோ வ்யாஸः ஸ்வயஞ்சைவ ப்ரவீஷி மே * என்கிருன்; இப்படி யுணர்ந்தவன் (4—1) * இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்த வாந் அஹமர்ஜுந! * என்று நான் சொன்னவுடனே * அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வதः * என்று ஆரம்பித்து 'இன்று பிறந்திருக்கிற சிறுவனுன நீ என் றைக்கோ இருந்த விவஸ்வானுக்கு உபதேசித்ததாகச் சொல்லுகிருயே, இது புரளிப் பேச்சல்லவா? இதை நான் எப்படி நம்பமுடியும்?' என்ருன். இத்தகைய கேள் வியை அவன் கேட்க ப்ரஸக்தியே இல்லை; ஆனுலும் உள்ளே சில கருத்துக்களை வைத்துக்கொண்டு கேட்டான்; அதை நான் தெரிந்துகொண்டு அவனுக்கு எவ்வ ளவோ சொன்னேன்; அப்படிப்பட்ட விஷயங்களைப்பற்றி நீ மேன்மேலும் கேட்பா யென்று நான் ஆசையோடிருக்க, என்னுடைய ஜாரசோர விருத்தாந்தங்களைக் கிளப்பிவிட்டாயே; இதற்கு முடிவுண்டோ? நீ சொன்ன பாட்டு எந்த பதிகத்தி லிருக்கிறதோ அதேபதிகத்தில் "பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்" என்கிற சந்தையுமிருக்கிறது. இது யசோதை சொல்லுவது. அவ ளுடைய காலத்தில் என்னைப்பற்றி ஒரு புத்தகமும் தோன்றவில்லை. அப்படியிருக்க புத்தகத்துக்குள கேட்டேனென்பது பெரியாழ்வா ரெழுதிவைத்த புத்தகமாகவே யிருக்கவேண்டும். அதிலுள்ள என்கதைகள் உனக்குத் தெரியாமலா இருக்கிறது.

அண்ணு—எனக்குத் தெரியாமல் எப்படி யிருக்கமுடியும்? * மச்சொடு மாளிகையேறி மாதர்கள்தம்மிடம் புக்கு, கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகி லவைகீறி. நிச்சலும் தீமைகள் செய்வாய் * எண்ணெய்க் குடத்தையுருட்டி இளம் பிள்ளை கிள்ளியெழுப்பிக், கண்ணைப்புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும்பிரானே * * கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்புசெய்வானேர் மகனைப்பெற்ற நந்தகோபா லன்......என்றிப்படிப்பட்ட பாசுரங்கள்தானே எங்களுக்கு நித்யாநுஸந்தானம்.

கண்ணு—திருமங்கையாழ்வார், ஓர் ஆய்ச்சியின் பாவனையிலே ஊடல் ரஸத்தை அநுபவியாநின்றவர் * ஆடியசைந்து ஆய்மடவாரொடு நீ போய்க் கூடிக் குரவை பிணை கோமளப் பிள்ளாய் * என்னச் செய்தேயும் உடனே * தேடித் திருமா மகள் மண்மகள் நிற்ப * என்கிருர்; அது ஸத்யமானது; திருமகளும் மண்மகளும் என்னைத் தேடிக்கொண்டு திரிகிருர்களாம்; போய்வருகிறேன். விரைவில் வருவேன் இங்கேயிரு. (தொடரும்)

## ஸ்ரீமதுபயவே. மு. ஸௌந் ரராஜய்யங்கார் ஸ்வாமி (ஹைதராபாத்)

### பொலிக ! பொலிக !! பொலிக !!!

கண்டோம் கண்டோம் கண்டோம் என்று ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்தியில் பேரார் வமும் கூடியாடிக் களித்தலும் அதுமட்டுமின்றி ஸ்ரீவைஷ்ணவதர்மம் நிலைகுலையுமோ என்று பயசங்கை பண்ணி அதைப்பேண அல்லும் பகலும் இடையீடின்றி உழைத்து தேஹத்தாலும் த்ரவ்யத்தாலும் நிஷ்காமமாகப் பாடுபட்டு உழைத்து வரும் உத்தம மகான் ஸ்ரீஉவே மு. ஸௌந்தரராஜ ஐயங்கார் ஸ்வாமி ஆவார். அந்த ஸ்வாமியின் கைங்கர்யங்களை எடுத்துச் சொல்ல அடியேனுக்கு வல்லதோ! என்று சங்கிக்கிறேன். இருந்தாலும் அடியேனுடைய ஆசைமுந்த அவர் செய்தருளின சிலவற்றை இங்குக்கூற முன்வருகின்றேன்.

ஸ்ரீஸ்வாமி சுமார் 55 வருஷங்களுக்கு முன்பு ஹைதராபாத் வந்து சேர்ந்தார். இவர்



லௌகிகத்தில் இருந்தாலும் தமக்குள்ள பெருமதிப்பை சத் விஷயத்திற்கு உபயோகப்படுத்தினர். இவர் ஹைதராபாத்தில் அடிக்கடி பல வித்வான்களைக்கொண்டு உபன்யாஸங்கள் ஏற்பாடு செய்தார். இந்த உபன்யாஸங்கள் செய்வதற்கு ஒரு பொதுவான கட்டிடம் இல்லையேயென்று பெருங்குறையாயிருந்தது. அதற்காக பல ப்ரமுகர்களிடம் விண்ணப்பம் செய்தார். இவருடைய அத்யவஸாயத்தை மிகவும் மெச்சி ஹைதராபாத்தில் பல ப்ரமுகர்களும் தாராளமாக நன்கொடை வழங்கினர். அதனால் குறிப்பிட்ட காலத்திற்குள்ளாகவே "பாலாஜீ பவன்" கட்டி முடிக்கப்பெற்றது. பிறகு ஸம்ஸ்க்ருத பாஷை ப்ரயோகம் நாளுக்கு நாள் குறைந்து வருகிறதே யென்று மிக மனக்லேசம் அடைந்தார். அதை எவ்விதத்திலும் அழியாமல் பாதுகாக்க மிக்க ஆவல் கொண்டார். பல ப்ரமுகர்கள் ஆதரவால் Council of Sanskrit Education ஹைதராபாத்தில் நிறுவப்பட்டது. அதில் 990 மாணவர்கள் பயின்றனர். ஆந்திரப்ரதேசத்தில் 32 பாடசாலைகள் நிறுவப்பட்டன. மேற்படி 32 பாடசாலைகளையும் ஒரு காலேஜையும் இந்த ஸ்வாமி மேற்படி கௌன்ஸிலின் செக்ரடரியாக இருந்து நன்கு பராமரித்து வந்தார். 1959ல் ப்ரஸிடென்ட் ராஜேந்த்ரப்ரஸாத் தலைமையில் பூரியில் நடந்த ஸம்ஸ்க்ருத விச்வபரிஷத் சபை ஸ்வாமியின் கௌன்ஸில் நிர்வாகத்தைப் பாராட்டி ஹைதராபாத்தில் ஒரு ஸம்ஸ்க்ருத யூனிவர்ஸிடி நிறுவ ஒரு தீர்மானமும் இயற்றினர். இவருடைய திறமையை டெக்கான் க்ரானிகல் போன்ற பத்திரிகைளும் மிகப் பாராட்டின. இவருடைய மகத்தான பணியை கீழ்க்கண்ட ப்ரமுகர்கள் பாராட்டியுள்ளனர். 1. டாக்டர் ராஜேந்த்ர ப்ரஸாத், 2. டாக்டர் B. ராமக்ருஷ்ண ராவ், 3 ஸ்ரீ K V. ரங்கா ரெட்டி, 4. ஸ்ரீ ஸுனித் குமார் சட்டர்ஜி, 5. ஸ்ரீ அனந்தசயனம் ஐயங்கார் முதலாக மற்றும் பலர்.

மேற்படி பாடசாலைகள் நடத்த ஸஹகரித்தவர்கள் பலர். அவர்களில் முக்கியமானவர்கள் பின்வருமாறு—1. மஹாராஜா ஸர் கிஷன் பர்ஷத் குடும்பத்தினர் தங்கள் ஆல்வால் அரண்மனையை அன்பளித்தனர் 2. முஸ்தியாலா குடும்பத்தினர் இரண்டு வீடுகளை அன்பளித்தனர். 8. முனகால் ராஜா குடும்பத்தினர் பூதானம் செய்தனர். 4. ராஜா ராணி வெங்கட் ராவ் லிம்பேகர் பூதானம் செய்தனர்.

ஸ்ரீஉ.வே. ஸௌந்தரராஜ ஐயங்கார் ஸ்வாமிக்கு எம்பெருமானாரிடமும் மணவாளமாமுனிகளிடமும் கனத்த ப்ரேமம். இவர் ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்வாமி அவதார மண்டப கைங்கர்ய கமிட்டி ஸெக்ரடரியாகப் பணியாற்றி ஆந்திரப்ரதேசத்தில் உள்ள பல பிரமுகர்களிடமிருந்து த்ரவ்யம் திரட்டி அனுப்பினர். இதுபோலவே காஞ்சிமாநகரில் மணவாளமாமுனிகள் ஸன்னிதி கைங்கர்யத்திற்கும் நிதி திரட்டி அனுப்பினர். இவர் தம் திருமாளிகையிலேயே பல ஆவ்ருத்திகள் ஸ்ரீராமாயண பாராயணம் பல ஸ்வாமிகளைக்கொண்டு படனம் செய்வித்தார். பல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தம் திருமாளிகையில் வஸிப்பதற்கு இடமளித்து அரவணைத்து வருகிறார். அவர்களில் அடியேனும் ஒருவன் ஆவன். பல்லாண்டு பல்லாண்டாய் இந்தஸ்வாமி எழுந்தருளியிருந்து அடியேன் போன்றவர்களுக்கு பேருன்றுகோலாக இருக்க ஆசார்யன் புருஷகாரமாக ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரன் திருவடித் தாமரைகளில் ப்ரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு,

**தாஸன் திருமழிசை ஜகந்நாதாசாரியர்,**

**(திருமழிசை மஹாவித்வான். தாதப்பங்கார் ஸ்வாமி தௌஹித்ரன்)**

ஸ்ரீ

# ஆழ்வார்களுகந்த இராமன்.

## ஸ்ரீ காஞ்சீ *P. B.* அண்ணங்கராசாரியர் தொகுத்தது

---

இராமபிரானையும் கண்ணபிரானையும் பற்றி ஆழ்வார்கள் பாசுரங்களில் அற்புதமாக விசேஷணங்களிட்டு அருளிச் செய்யப்பட்டுள்ள சந்தைகள் பலபலவுள்ளன ; அவற்றை வரிசையாகத் தொகுத்து அநுஸந்தானத்திற்கு அனுகூலமாக வுபகரிக்க வேணுமென்று பலபக்தர்கள் விரும்பினபடியால் இது வெளியிடப்படுகின்றது. இராமபிரானைப் பற்றிய சந்தைகளை முதலில் தொகுத்து முடித்திட்டுப் பிறகு கண்ணபிரானைப் பற்றின சந்தைகளைத் தொகுப்போம். முதலாயிரம் தொடங்கி அடைவே இது தொகுக்கப்படுகின்றது.

### முதலாயிரம்

### திருப்பல்லாண்டு

1 இராக்கதர் வாழிலங்கை பாழாளாகப் படை பொருதான். (3)

### பெரியாழ்வார் திருமொழி

2 பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை இரந்திட்ட கைம்மேல் எறிதிரை மோதக் கரந்திட்டு நின்ற கடலைக் கலங்கச் சரந் தொட்ட கையான். (1-6-7)

3 குரக்கினத்தாலே குரைகடல் தன்னை நெருக்கி யணைகட்டி நீணீரிலங்கை அரக்கரவிய அடுகணையாலே நெருக்கிய கையான். (1-6-8)

4 கொங்கைவன்கூனி சொற்கொண்டு குவலயத் துங்கக் கரியும் பரியும் இராச்சியமும் எங்கும் பரதற்கருளி வன்கானடை அங் கண்ணன். (2-1-8)

5 வல்லாளிலங்கை மலங்கச் சரந்துரந்த வில்லாளன். (2-1-10)

6 சிலையொன்றிறுத்தான். (2-3-7)

7 நின்ற மராமரஞ் சாய்த்தான். (2-4-2)

8 பொற்றிகழ் சித்திரகூடப் பொருப்பினில் உற்றவடிவிலொரு கண்ணுங்கொண்ட அக் கற்றைக் குழலன். (2-6-7)

9 மின்னிடைச் சீதை பொருட்டா இலங்கையர் மன்னன் மணிமுடி பத்துமுடன் விழத் தன்னிக ரொன்றில்லாச் சிலைகால் வளைத்திட்ட மின்னுமுடியன். (2-6-8)

10 தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணிசெய்து மின்னிலங்கு பூண் விபீடண நம்பிக்கு என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற மின்னலங்காரன். (2-6-9)

11 கள்ளவரக்கியை மூக்கொடு காவலனைத்தலை கொண்டான். (2-7-5)

12 என் வில்வலி கண்டு போவென்றெதிர் வந்தான்தன் வில்லினோடுந் தவத்தை யெதிர்வாங்கி முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான். (3-9-2)

13 மாற்றுத்தாய் சென்று வனம் போகே யென்றிட ஈற்றுத்தாய் பின்றொடர்ந்து எம்பிரானென்றழக் கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம்போன சீற்றமிலாத சீதை மணாளன். (3-9-4)

14 முடியொன்றி மூவுலகங்களுமாண்டு உன் னடியேற் கருளென்று அவன்பின் தொடர்ந்த படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்று அடிநிலை யீந்தான். (3-9-6)

15 தார்க்கிளந் தம்பிக்கு அரசீந்து, தண்டகம் நூற்றவள் சொற்கொண்டு போகி நுடங்கிடைச் சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவள் ஆர்க்க அரிந்தான். (3-9-8)

16 காரார் கடலையடைத்திட் டிலங்கைபுக்கு ஓராதான் பொன்முடி ஒன்பதோடொன்றையும் நேரா அவன் தம்பிக்கே நீளரசீந்த ஆராவமுதன். (3-9-10)

17 செறிந்த மணிமுடிச்சனகன் சிலையிறுத்துச் சீதையைக் கொணர்ந்த தறிந்து அரசுகளைகட்ட அருந்தவத்தோனிடைவிலங்கச் செறிந்த சிலைகொடு தவத்தைச் சிதைத்தவன். (3-10-1)

18 எல்லியம் போதினிதிருத்தல் இருந்ததோரிடவகையில் மல்லிகை மாமாலைகொண்டு அங்கார்க்கவிருந்தான். (3-10-2)

19 கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேசி வரம் வேண்ட மலக்கிய மாமனத்தனாய் மன்னவனும் மருதொழியக் குலக்குமரா காடுறையப் போவென்று விடைகொடுப்ப இலக்குமணன் தன்னொடும் அங்கேகினான். (3-10-3)

20 கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கை தன்னில் சீரணிந்த தோழமை கொண்டான். (3-10-4)

21 தானமரும் கல்லதர் போய்க் காடுறைந்த காலத்துத் தேனமரும் பொழிற் சாரல் சித்திர கூடத்திருப்பப் பரதநம்பி பணிய நின்றான். (3-10-5)

22 சித்திரகூடத்திருப்பச் சிறு காக்கை முலை தீண்ட அத்திரமே கொண்டெறிய அனைத்துலகுந்திரிந்தோடி வித்தகனே யிராமா ஓ நின்னபயமென்றழைப்ப அத்திரமேயதன் கண்ணை யறுத்தான். (3-10-6)

23 பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாடச் சிலைபிடித் தெம்பிரானேகப் பின்னேயங் கிலக்குமணன் பிரிய நின்றான். (3-10-7)

24 அடையாளம் மொழிந்த அத்தகு சீரயோத்தியர் கோன். (3-10-8)

25 திக்கு நிறை புகழாளன் தீவேள்விச் சென்ற நாள் மிக்க பெருஞ்சவை நடுவே வில்லிறுத்தான். (3-10-9)

26 கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண் முடியன் எதிரிற் பெருமை யிராமன் (4-1-1)

27 நாந்தகம் சங்கு தண்டு நாணொலிச்சார்ங்கம் திருச்சக்கரம் ஏந்து பெருமை யிராமன் காந்தள் முகிழ்விரல் சீதைக்காகிக் கடுஞ் சிலை சென்றிறுக்க வேந்தர் தலைவன் சனக ராசன் தன் வேள்வியில் காண நின்றான். (4-1-2)

28 சிலையால்மராமர மெய்ததேவன் – தலையால் குரக்கினம் தாங்கிச் சென்று தடவரை கொண்டடைப்ப அலையார் கடற்கரை வீற்றிருந்தான். (4-1-3)

29 அலம்பா வெருட்டாக் கொன்று திரியுமரக் கரைக் குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய் நின்றகோன். (4-2-1)

30 வல்லாளன் தோளும் வாளரக்கன் முடியும் தங்கை பொல்லாத மூக்கும் போக்குவித்தான் (4-2-2)

31 கனங்குழையாள் பொருட்டாக் கணை பாரித்து அரக்கர் தங்கள் இனம் கழு வேற்றுவித்த எழில்தோள் எம்மிராமன். (4-3-7)

32 எரிசிதறும் சரத்தால் இலங்கையனைத் தன்னுடைய வரிசிலைவாயில் பெய்து வாய்க்கோட்டம் தவிர்த்துகந்த அரையன். (4-3-8)

33 தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த எம் தாசரதி. (4-7-1)

34 கூன்தொழுத்தை சிதகுரைப்பக் கொடியவள் வாய்க் கடிய சொற் கேட்டு ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமுமாங் கொழியக் கான் கொடுத்த நெறிபோகிக் கண்டகரைக் களைந்தான். (4-8-4)

35 பெருவரங்களவை பற்றிப் பிழக்குடைய இராவணனை உருவரங்கப் பொருதழித்திவ் வுலகினைக் கண் பெறுத்தான். (4-8-5)

36 கீழுலகில் அசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே ஆழிவிடுத் தவருடைய கருவழித்த அழிப்பன். (4-8-6)

37 கொழுப்புடைய செழுங்குருதி கொழித்த திழிந்து குமிழ்த்தெறியப் பிழக்குடைய வசுரர்களைப் பிணம்படுத்த பெருமான். (4-8-7)

38 பருவரங்களவை பற்றிப் படையாலித்தெழுந்தானைச் செருவரங்கப் பொருதழித்த திருவாளன். (4-8-10)

39 மரவடியைத் தம்பிக்கு வான் பணயம் வைத்துப்போய் வானோர் வாழச் செருவுடைய திசைக்கருமம் திருத்தி வந்துல காண்ட திருமால். (4-9-1)

40 மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்தான். (4-9-2)

## திருப்பாவை

41 சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான். (12)

42 பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தான். (13)

43 சென்றங்குத் தென்னிலங்கை செற்றான். (24)

## நாச்சியார் திருமொழி

44 கடலையடைத்தரக்கர் குலங்களை முற்றவும் செற்றிலங்கையைப் பூசலாக்கிய சேவகன். (2-6)

45 சேதுபந்தம் திருத்தினான். (2-7)

46 சீதை வாயமுதமுண்டான். (2-10)

47 வில்லாலிலங்கையழித்தான். (3-3)

48 இலங்கையழித்த பிரான். (3-4)

49 மாதலிதேர் முன்பு கோல்கொள்ள மாயனி ராவணன் மேல் சரமாரி தாய் தலையற்றற்று விழத் தொடுத்த தலைவன். (3-3)

50 கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார். (10-4)

## பெருமாள் திருமொழி

51 சுடர் வாளியால் நீடுமாமரம் செற்றவன். (2-2)

52 முன்னிராமனாய் மாறடர்த்தான். (2-3)

53 மன்னு புகழ்க் கௌசலை தன் மணிவயிறு வாய்த்தவன்; தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தான். (8-1)

54 திண்திறலாள் தாடகைதன் உரமுருவச் சிலை வளைத்தான். (8-2)

55 கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலை, தங்கு பெரும் புகழ்ச்சனகன் திருமருகன் தாசரதி. (8-2)

56 தயரதன் தன்மாமதலை, மைதிலிதன் மணவாளன், ஏமரு வெஞ்சிலை வலவன். (8-4)

57 பாராளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி ஆராவன்புஇளையவனோடு அருங்கானம் அடைந்தவன். (8-5)

58 சுற்றமெல்லாம் பின்தொடரத் தொல்கானம் அடைந்தவன், அயோத்தி நகர்க்கதிபதி, சிற்றவைதன் சொல் கொண்ட சீராமன். (8-6)

59 வாலியைக்கொன்று அரசு இளைய வானரத்துக்களித்தவன். (8-7)

60 மலையதனாலணைகட்டி மதிளிலங்கையழித்தவன்; சிலைவலவன்; சேவகன்; சீராமன். (8-8)

61 தளையவிழுநறுங்குஞ்சித் தயரதன் தன் குலமதலை, வளைய ஒருசிலை யதனால் மதிளிலங்கை அழித்தவன், இளையவர்க் கருளுடையான். (8-9)

62 ஏவரிவெஞ் சிலைவலவன் இராகவன். (8-10)

63 வன்தாளினிணைவணங்கி வளநகர்ந்தொழுதேத்த மன்னனாவான் நின்றான் — அரியணை மேலிருந்தாய் நெடுங்கானம் படர்ப் போக நின்றான். (9-1)

64 இருநிலத்தை வேண்டாதே விரைந்து வென்றி மைவாய களிறொழிந்து தேரொழிந்து மாவொழிந்து வனமேமேவி நெய்வாய வேல்நெடுங் கண்ணேரிழையும் இளங்கோவும் பின்புபோக நடந்தான். (9-2)

65 கொல்லணைவேல் வரிநெடுங்கண் கௌசலைதன் குலமதலை, குனிவில்லேந்தும் மல்லணைந்த வரைத்தோளன், வியன்கானமரத்தினீழல் கல்லணைமேல் கண் துயிலக் கற்ற காகுத்தன். (9-3)

66 வேய்போலு மெழில்தோளிதன்பொருட்டா விடையோன்றன் வில்லைச் செற்றான். (9-4)

67 பொருந்தார்கைவேல்நுதிபோல் பரல்பாய மெல்லடிக்கள் குருதிசோர விரும்பாதகான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசி நோய் கூரப் போனவன். (9-5)

68 பூமருவுநறுங்குஞ்சி புன்சடையாப்புனைந்து பூந்துகில் சேரல்குல் காமரெழில் விழ லுடுத்துக் கலனணியாது அங்கங்கள் அழகு மாறி ஏமருதோள் புதல்வன் வனஞ் சேர்ந்தான். (9-7)

69,70. பொன்பெற்றுர் எழில்வேதப்புதல்வன்; முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி அவன் தவத்தை முற்றுஞ்செற்றுன். (9-8)

71 தேனகுமாமலர்க்கூந்தல் கௌசலையுஞ் சுமித்திரையுஞ் சிந்தை நோவக் கூனுரு வில் கொடுந்தொழுத்தை சொற் கேட்ட கொடியவள் தன் சொற்கொண்டு கானகமே மிகவிரும்பி வள நகரைத்துறந்தான். (9-10)

72 ஏரார்ந்த கருநெடுமாலிராமன். (9-11)

73 அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி யென்னும் அணிநகரத் துலகனைத்தும் விளக்குஞ்சோதி வெங்கதிரோன் குலத்துக் கோர் விளக்காய்த்தோன்றி விண்முழுது முய்யக்கொண்ட வீரன் செங்கண் நெடுங் கருமுகிலிராமன். (10-1)

74 வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக்கீறி வருகுருதி பொழிதர வன்கணையொன்றேவி மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து வல்லரக்கருயிருண்ட மைந்தன். (10-2)

75 செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்காகிச் சினவிடையோன் சிலையிறுத்து மழுவா ளேந்தி வெவ்வரிநற்சிலை வாங்கி வென்றி கொண்டு வேல் வேந்தர் பகைதடிந்தவீரன் எவ்வரிவெஞ்சிலைத்தடக்கை யிராமன். (10-3)

76 தொத்தலர்பூஞ்சுரிகுழல் கைகேசிசொல்லால் தொன்னகரந்துறந்து துறைக் கங்கை தன்னைப் பத்தியுடைக் குகன்கடத்த வனம் போய்ப் புக்குப் பரதனுக்குப் பாதுகமு மரசுமீந்து சித்திரகூடத்திருந்தான். (10-4)

77 வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று வண்தமிழ் மாமுனி கொடுத்தவரி வில்வாங்கிக் கலைவணக்கு நோக்கரக்கி மூக்கைநீக்கிக் கரனோடு தூடணன்தன் உயிரைவாங்கிச் சிலை வணக்கி மான்மரிய எய்தான். (10-5)

78 தனமருவுவைதேகி பிரியலுற்றுத் தளர் வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி வனமருவு கவியரசன் காதல்கொண்டு வாலி யைக் கொன்று இலங்கைநகர் அரக்கர் கோமான் சின மடங்க மாருதியால் சுடுவித் தான். (10-6)

79 குரைகடலை அடலம்பால் மறுக எய்து குலை கட்டி மறுகரையை அதனுலேறி எரிநெடு வேலரக்கரொடும் இலங்கைவேந்தன் இன் னுயிர்கொண்டு அவன் தம்பிக்கரசுமீந்து திருமகளோடு இனிதமர்ந்த செல்வன். (10-7)

80 அம்பொனெடு மணிமாட அயோத்தி எய்தி அரசெய்தி அகத்தியன் வாய்த்தான்முன் கொன்றுன் தன் பெருந்தொல் கதைகேட்டு, மிதிலைச்செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள் செம்பவளத் திரள்வாய்த் தன் சரிதைகேட்டான். (10-8)

81 செறிதவச் சம்புகன்தன்னைச் சென்று கொன்று செழுமறையோன் உயிர்மீட்டுத் தவத்தோனீந்த நிறைமணிப்பூ ணணியுங் கொண்டு இலவணன் தன்னைத் தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத் திறல் விளங்குமிலக்குமனைப் பிரிந்தான். (10-9)

82 அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி அடலரவப்பகையேறி அசுரர் தம்மை வென்று இலங்குமணி நெடுந்தோள் நான்குந் தோன்ற விண்முழுது மெதிர் வரத் தன்தாமமேவிச் சென்றினிது வீற்றி ருந்த அம்மான். (10-10)

83 தில்லைநகர்த் திருச் சித்திர கூடந்தன்னுள் திறல் விளங்கு மாருதி யோடமர்ந்தான் எல்லையில் சீர்த்தயரதன் தன்மகன். (10-11)

## திருச்சந்த விருத்தம்

84 குரங்கையாளுகந்த வெந்தை. (21)

85 கூனகம் புகத்தெறித்த கொற்றவில்லி.(30)

86 வேலை வேவ வில்வளைத்த வெல்சினத்த வீரன். (31)

87 குரக்கினப் படைகொடு குரை கடலின் மீதுபோய் அரக்கர் அங்கரங்க வெஞ்சரந் துரந்தவாதி. (32)

88 மின்னிறத்து எயிற்றரக்கன் வீழ வெஞ் சரந் துரந்து பின்னவற் கருள்புரிந்து அர சளித்த பெற்றியோன். (33)

89 வெற்பெடுத்து வேலை நீர் வரம்பு கட்டினன்.

90 வெற்பெடுத்த விஞ்சி சூழிலங்கை கட்டழித் தான். (39)

91 கொண்டை கொண்ட கோதைமீது தேனு லாவு கூனிகூன் உண்டை கொண்டரங்க வோட்டி உண் மகிழ்ந்த நாதன். (49)

92 வெண்டிரைக் கருங்கடல் சிவந்து வேவ முன்னோர் நாள் திண்டிறல் சிலைக்கைவாளி விட்டவீரர். (50)

93 சரங்களைத்துரந்து வில்வளைத்து இலங்கை மன்னவன் சிரங்கள் பத்தறுத்து உதிர்த்த செல்வர். (51)

94 இலைத்தலைச்சரம் துரந்து இலங்கை கட்டழித்தவன். (54)

95 இலங்கை மன்னன் ஐந்தொடைந்து பைந் தலை நிலத்து உகக் கலங்கவன்று சென்று கொன்று வென்றி கொண்ட வீரன். (56)

96 மரம் பொதச் சரந்துரந்து வாலி வீழ முன் னோர் நாள் உரம் பொதச் சரந்துரந்த உம் பராளி யெம்பிரான். (73)

97 உடைந்த வாலிதந்தனுக்கு உதவ வந்தி ராமனாய் மிடைந்த வேழ்மரங்களுமடங்க வெய்தான். (81)

98 பண்ணுலாவுமென் மொழிப் படைத்தடங் கணாள் பொருட்டு எண்ணிலாவரக்கரை நெருப்பினால் நெருக்கினான். (91)

99 இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்வி ராமன். (93)

100 குன்றினால் துள்ளுநீர் வரம்பு செய்த தோன்றல். (102)

101 கடுங் கவந்தன் வக்கரன் கரன்முரன் சிரமவை இடந்து கூறுசெய்த பல்படைத் தடக்கை மாயன். (104)

102 மாறு செய்த வாளரக்கன் நாளுலப்ப அன்றிலங்கை நீறு செய்து சென்று கொன்று வென்றிகொண்ட வீரனார். (116)

## திருமாலை

103 சிலையினாலிலங்கை செற்ற தேவன். (7)

104 ஒரு வில்லால் ஓங்குமுந்நீரடைத்து உலகங் களுய்யச் செருவிலே அரக்கர் கோனைச் செற்றநம் சேவகனார். (11)

## திருப்பள்ளியெழுச்சி.

105 இலங்கையர் குலத்தை வாட்டிய வரிசிலை வானவரேறு; மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய அடுதிறல யோத்தி யெம்மரசு (4)

## அமலனாதிபிரான்.

106 அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன். (2)

107 சதுரமாமதிள் சூழிலங்கைக் கிறைவன் தலைபத்து உதிரவோட்டி ஓர் வெங்கணை யுய்த்தவன். (4)

## முதலாயிரம் முற்றிற்று

## = இரண்டாவதாயிரம்—பெரிய திருமொழி =

108 வாலிமாவலத் தொருவனதுடல் கெட வரிசிலை வளைவித்தான். (1-2-1)

109 கலங்க மாக்கடலரிகுலம் பணிசெய்ய அருவரையணை கட்டி இலங்கை மாநகர் பொடி செய்த அடிகள். (1-2-2)

110 தானவனாகம் தரணியில் புரளத் தடஞ்சிலை குனித்த வென்தலைவன். (1-4-1)

111 கானிடையுருவைச் சுடுசரம் துரந்து கண்டுமுன் கொடுந்தொழில் உரவோன் ஊனுடையகலத்து அடுகணை குளிப்ப உயிர் கவர்ந்துகந்த எம்மொருவன். (1-4-2)

112 இலங்கையும் கடலும் அடலருந் துப்பின் இருநிதிக் கிறைவனும் அரக்கர்குலங்களுங் கெட முன் கொடுந் தொழில் புரிந்த கொற்றவன். (1-4-3)

113 மான்முனிந் தொருகால் வரிசிலை வளைத்த மன்னவன். (1-4-9)

114 கலையுங்கரியும் பரிமாவுந் திரியுங்கானங் கடந்து போய்ச் சிலையுங்கணையுந் துணையாகச் சென்றான், மலைகொண்டலை நீரணை கட்டி மதிள் நீரிலங்கை வாளரக்கர் தலைவன் தலைபத்து அறுத்துகந்தான். (1-5-1)

115 கடம் சூழ்கரியும் பரிமாவும் ஒலிமாந்தேரும் காலாளும் உடன் சூழ்ந்தெழுந்த கடியிலங்கை பொடியா வடிவாய்ச் சரந்துரந் தான். (1-5-2)

116 ஒருகாலிருகால் சிலைவளையத் தேராவரக்கர் தேர் வெள்ளம் செற்றான். (1-5-4)

117 அடுத்து ஆர்த்து எழுந்தாள் பிலவாய் விட்டலற அவள் மூக்கு அயில் வாளால் விடுத்தான். (1-5-5)

118 மராமரமேழுமெய்த வலத்தினான் (1-8-5)

119 கண்ணார்கடல் சூழிலங்கைக் கிறைவன் தன் திண்ணாகம் பிளக்கச் சரம் செலவுய்த்தான். (1-10-1)

120 இலங்கைப்பதிக்கன்று இறையாய அரக்கர் குலங்கெட்டு அவர் மாளக்கொடிப் புள் தெரித்தான். (1-10-2)

121 காசையாடை மூடியோடிக் காதல் செய் தானவனூர் நாசமாக நம்பவல்ல நம்பி நம்பெருமான். (2-2-1)

122 தையலாள் மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன் பொய்யிலாத பொன்முடிகளொன்பதோடோன்று மன்று செய்த வெம்போர் தன்னிலங்கோர் செஞ்சரத்தாலுருள எய்த வெந்தையெம்பெருமான். (2-2-2)

123 முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து அரக்கன் மன்னூர் தன்னை வாளியினால் மாளமுனிந்தான். (2-2-3)

124 சிற்றவை பணியால் முடி துறந்தான். (2-3-1)

125 பரதனும் தம்பி சத்துருக்கனனும் இலக்குமனோடு மைதிலியும் இரவு நன் பகலும் துதிசெய்ய நின்ற இராவணாந்தகன். (2-3-7)

126 மாலும் கடலார மலைக்குவடிட்டு அணைகட்டி வரம்புருவ மதிசேர் கோலமதிளாய இலங்கை கெடப் படைதொட்டு ஒருகால மரிலதிரக் காலமிதுவென்று அயன் வாளியினால் கதிர் நீண் முடிபத்துமறுத்தமரும் நீலமுகில் வண்ணன். (2-4-5)

127 கிளர்பொறியமறிதிரிய அதனின் பின்னே படர்ந்தான். (2-5-6)

128 தென்னிலங்கை யரக்கர் வேந்தை விலங் குண்ண வலங்கை வாய்ச் சரங்களாண் டான். (2-5-9)

129 விண்டாரை வென்று ஆவி விலங்குண்ண மெல்லியலார் கொண்டாடும் மல்லகலம் அழலேற வெஞ்சமத்துக்கண்டார். (2-6-4)

130 தடங்கல் நுடங்கெயிலிலங்கை வன்குடி மடங்க வாளமர் தொலைத்தான். (2-7-6)

131. குடைத்திறல் மன்னவனு யொருகால் குரங்கைப்படையா மலையால்கடலை யடைத் தவனெந்தைபிரான். (2-9-8)

132 தாங்கரும் போர் மாலிபடப் பறவையூர்ந்து தராதலத்தோர் குறை முடித்த தன்மை யான். (2-10-4)

133 கறைவளர் வேல் கரன் முதலாக் கவந்தன் வாலி கணையொன்றினுல் மடிய இலங்கை தன்னுள் பிறையெயிற்று வாளரக்கர் சேனையெல்லாம் பெருந்தகையோடுடன் துணித்த பெம்மான். (2-10-5)

134 கூனுலாவிய மடந்தை தன் கொடுஞ் சொலின் திறத்து இளங்கொடியோடும் கானுலாவிய கருமுகில் திருநிறத்தவன். (3-1-6)

135 மின்னினுண்ணிடை மடக்கொடி காரணம் விலங்கலின் மிசையிலங்கை மன்னன் நீண்முடி பொடி செய்த மைந்தன். (3-1-7)

136 நெய் வாயழலம்பு துரந்து முந்நீர் துணியப் பணி கொண்டணியார்ந்து இலங்குமை யார் மணிவண்ணன். (3-2-6)

137 பைங்கண் விறல் செம்முகத்து வாலிமாளப் படர்வனத்துக் கவந்தனொடும் படையார் திண்கை வெங்கண் விறல் விராதனுக விற்குனித்த விண்ணவர் கோன். (3-4-6)

138 பொருவில் வலம்புரி யரக்கன் முடிகள் பத்தும் புற்று மறிந்தன போலப் புவிமேல் சிந்தச் செருவில் வலம்புரி சிலைக்கை மலைத் தோள் வேந்தன். 3-4 7)

139 மரமெய்த மாமுனிவன். (3-5-5)

140 அரக்கர் குலப்பாவை தன்னை வெஞ்சின மூக்கரிந்த விறலோன். (3-7-3)

141 சிறையாருவணப் புள்ளொன்றேறியன்று திசைநான்கு நான்கு மிரியச் செருவில் கறையார் நெடுவே லரக்கர் மடியக் கடல் சூழிலங்கை கடந்தான். (3-8-4)

142 கலையிலங்கு மகலல்குலரக்கர் குலக்கொடி யைக் காதொடு மூக்குடனரியக் கதறியவ ளோடித் தலையில் அங்கை வைத்து மலை யிலங்கை புகச்செய்த தடந்தோளன். (3-9-4)

143 மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா இலங்கை வேந்தன் முடியொருபதும் தோளிருபதும் போயுதிரத் தன்னிகரில் சிலை வளைத் தன்றிலங்கை பொடி செய்த தடந்தோளன். (3-9-5)

144 வாள் நெடுங்கண் மலர்க்கூந்தல் மை திலிக்கா இலங்கை மன்னன் முடியொரு பதும் தோளிருபதும் போயுதிரத் தாள் நெடுந்திண் சிலைவளைத்த தயரதன் சேய். (3-10-6)

145 வாராரு மிளங்கொங்கை மைதிலியை மணம் புணர்வான் காரார் திண் சிலை யிறுத்த தனிக்காளை. (4-1-8)

146 கம்பமா கடலடைத் திலங்கைக்குமன் கதிர் முடியவை பத்து மம்பினுலறுத்து அரச வன் தம்பிக் களித்தவன். (4-2-1)

147 தீமனத்தரக்கர் திறலழித்தவனே யென்று சென்றடைந்தவர் தமக்குத் தாய் மனத் திரங்கி யருளினைக் கொடுக்கும் தயரதன் மதலை. (4-3-5)

148 மல்லை மாமுந்நீரதர்பட, மலையாலணை செய்து மகிழ்ந்தவன். கல்லின் மீதியன்ற கடிமதிளிலங்கை கலங்க ஓர் வாளி தொட் டான். (4-3-6)

149 தான்போலு மென்றெழுந்தான் தரணி யாளன் அது கண்டு தரித்திருப்பானரக்கர் தங்கள்கோன் போலு மென்றெழுந்தான் குன்றமன்ன இருபது தோளுடன் துணித்த வொருவன். (4-4-6)

150 இலங்கை வவ்விய விடும்பை தீரக் கடுங் கணை துரந்த வெந்தை. (4-5-2)

151 கருமகளிலங்கையாட்டி பிலங்கொள் வாய் திறந்து தன்மேல் வருமவள் செவியும் மூக்கும் வாளினால் தடிந்த வெந்தை. (4-5-5)

152 உருத்தெழு வாலி மார்வி லொருகணை யுருவ வோட்டிக் கருத்துடைத்தம்பிக் கின்பக் கதிர் முடியரசளித்தான். (4-6-3)

153 முனை முகத்தரக்கன் மாள முடிகள் பத் தறுத்து விழ்த்து ஆங்கனையவற் கிளைய வற்கே யரசளித்தருளினன். (4-6-4)

154 கல்லால் கடலையணை கட்டி யுகந்தான். (4-7-6)

155 மல்லை முந்நீர் தட்டிலங்கை கட்டழித்த மாயன். (4-8-4)

156 அரக்கராவி மாள வன்று ஆழ்கடல் சூழி லங்கை செற்ற குரக்கரசன்; கோலவில்லி. (4-8-5)

157 அலைகடலடைத்திட்டு அரக்கர் தஞ்சிரங் களை யுருட்டினன். (4-10-6)

158 காற்றிடைப் பூளை கரந்தன வரந்தையுறக் கடலரக்கர் தம் சேனை கூற்றிடைச் செல்லக் கொடுங்கணை துரந்த கோல வில்லி ராமன். (4-10-6)

159 மேவா வரக்கர் தென்னிலங்கை வேந்தன் வீயச் சரந்துரந்தான். (5-1-9)

160 விறல் வாளரக்கர் தலைவன்றன் வற்பார் திரள் தோள் ஐந்நான்கும் துணித்த வல் விலி ராமன். (5-1-4)

161 ஆறினேடொரு நான்குடை நெடுமுடியரக் கன்றன் சிரமெல்லாம் வேறு வேறுக வில்லது வளைத்தவன். (5-3-7)

162 விளைத்த வெம்போர்விறல் வாளரக்கன் நகர் பாழ்பட வளைத்த வல்வில் தடக்கையவன். (5-4-4)

163 வம்புலாங் கூந்தல் மண்டோதரி காதலன் வான்புக அம்பு தன்னால் முனிந்த அழகன். (5-4-5)

164 மராமரமேழெய்த வென்றிச்சிலையாளன் (5-5-2)

165 சுரிகுழல் கனிவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கனெரி விழித் திலங்கு மணிமுடி பொடிசெய்து இலங்கை பாழ்படுப்பதற் கெண்ணி வரிசிலை வளைய அடுசரந்துரந்து மறிகடல் நெறிபட மலை யால் அரிகுலம் பணி கொண்டலைகடலடைத் தான். (5-7-7)

166 இலங்கை மலங்க வன்றடு சரந்துரந்தான். (5-7-8)

167 ஏழையேதலன் கீழ்மகனென்னுதிரங்கிமற்ற வற்கின்னருள் சுரந்து மாழைமான் மட நோக்கியுன் தோழி உம்பி யெம்பியென்று உகந்து தோழன் நீயெனக்கிங்கொழி யென்ருன். (5-8-1)

168 வாதமாமகன் மற்கடம் விலங்கு மற்ருேர் சாதியென்றெழியாது உகந்துகாதலாதரம் கடலினும் பெருகச்செய் தகவினுக்கில்லை கைம்மாறென்று கோதில் வாய்மையினு யொடு முடனே யுண்பன் நானென்ருன். (5-8-2)

169 விலங்கலால் கடலடைத்து விளங்கிழை பொருட்டு வில்லாலிலங்கை மாநகர்க்கிறை வன் இருபது புயம் துணித்தான். (5-9-6)

170 பிறைபினெளி யெயிறிலக முறுகியெதிர் பொருதுமின்ன வந்த வசுரர் இறைகளவை நெறு நெறென வெறியவவர் வயிறழல நின்ற பெருமான். (5-10-4)

171 மூளவெரி சிந்திமுனி வெய்தியமர் செய்து மென வந்த வசுரர் தோளுமவர்தாளும் முடியோடு பொடியாக நொடியாமளை வெய்தான். (5-10-5)

172 தம்பியொடு தாமொருவர் தன் துணைவி காதல் துணையாக முனநாள் வெம்பியெரி கானக முலாவுமவர். (5-10-6)

173 வற்ரு நீள் கடல் சூழிலங்கை யிராவண னைச் செற்ருன். (6-3-5)

174 தொன்னீரிலங்கை மலங்க விலங்கெரி யூட்டினுன். (6-4-6)

175 ஆனைப்புரவித் தேரொடு காலாளணி கொண்ட சேனைத்தொகையைச்சாடி யிலங்கை செற்ருன். (6-5-3)

176 விண்ட நிசாசரரைத் தோளுந்தலையும் துணி வெய்தச் சுடு வெஞ்சிலை வாய்ச்சரந் துரந்தான். (6-7-1)

177 துள்ளா வருமான் விழ வாளிதுரந்தான். (6-7-3)

178 கல்லார் மதிள் சூழ் கடியிலங்கைக் காரரக்கன் வல்லாகங் கீள் வரிவெஞ்சரந்துரந்த வில்லான்—செல்வ விபீடணற்கு வேருக நல்லான். (6-8-5)

179 பழியாரும் விறலரக்கன் பருமுடிகளவை சிதற அழலாரும் சரந்துரந்தான். (6-9-2)

180 எறிஞரரணழியக் கடியாரிலங்கை கடந்த நம்பி. (6-10-1)

181 இலங்கைக்கோன் வல்லாளாகம் வில்லால் முனிந்த வெந்தை விபீடணற்கு நல்லான். (6-10-4)

182 தென்னிலங்கை அடையாவரக்கர் வியப் பொருது மேவிவெங்கூற்றம் நடையா வுண்ணக் கண்டான். (6-10-5)

183 கான வெண்கும் குரங்கும் முசுவும் படையா அடலரக்கர்மான மழித்து நின்ற வென்றி யம்மான். (6-10-6)

184 வில்லேர் நுதல் வேல்நெடுங் கண்ணியுடன் கல்லார் கடுங்கானம் திரிந்த களிறு. (7-1-5)

185 சினவில் செங்கணரக்கருயிர் மாளச் செற்ற வில்லி—மரமேழெய்த மைந்தன். (7-3-1)

186 ஆழிசூழிலங்கை மலங்கச்சென்று சரங் களாண்ட தண்டாமரைக்கண்ணன். (7-3-4)

187 தழலேபுரை மின்செய் வாளரக்கன் நகர் பாழ்படச் சூழ்கடல் சிறை வைத்தான். (7-3-9)

188 மீதோடி வாளெயிறு மின்னிலக முன்விலகு முருவினுளைக் காதோடு கொடி மூக்கன்றுட னறுத்த கைத்தலத்தன். (7-4-3)

189 தேராளும் வாளரக்கன் தென்னிலங்கை வெஞ்சமத்துப் பொன்றி விழப் போராளும் சிலையதனுல் பொருகணைகள் போக்குவித் தான். (7-4-4)

190 செம்பொன் மதிள் சூழ் தென்னிலங்கைக் கிறைவன் சிரங்கள் ஐயிரண்டும் உம்பர் வாளிக் கிலக்காக உதிர்த்தவுரவோன். (7-5-3)

191 அடையார் தென்னிலங்கை யழித்தான். (7-6-3)

192 பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப் பகலவன் மீதியங்காத விலங்கை வேந்தன் அந்தமில்திண் கரஞ்சிரங்கள் புரண்டு விழ அடுகணையா லெய்துகந்த வம்மான். (7-8-7)

193 தார்மன்னு தாசரதி—வாளரக்கர் காலன். (8-4-7)

194 ஏழுமாமரம் துளைபடச் சிலை வளைத்திலங் கையை மலங்குவித்த ஆழியான். (8-5-5)

195 முரியும் வெண்டிரை முதுகயம் தீப்பட முழங்கழ லெரியம்பின் வரிகொள் வெஞ் சிலை வளைவித்த மைந்தன். (8-5-6)

196 கலங்கமாக்கடல் கடைந்தடைத் திலங்கை யர் கோனது வரையாகம் மலங்க வெஞ் சமத்தடுசரந்துரந்த எம்மடிகள். (8-5-7)

197 துளங்கா வரக்கர் துளங்கமுன் திண்டோள் நிமிரச் சிலை வளையச் சிறிதே முனிந்த திருமார்பன். (8-6-1)

198 பொருந்தா வரக்கர் வெஞ்சமத்துப் பொன்ற வன்று புள்ளூர்ந்து பெருந்தோள் மாலி தலைபுரளப்பேர்ந்தவரக்கர் தென்னிலங்கை யிருந்தார் தம்மையுடன் கொண்டு அங் கெழிலார் பிலத்துப் புக்கொளிப்பக் கருந் தாள் சிலைக்கைக் கொண்டான். (8-6-2)

199 வல்லியிடையாள் பொருட்டாக மதிள் நீரி லங்கையார் கோவை அல்லல் செய்து வெஞ்சமத்துள் ஆற்றல் மிகுந்த வாற்ற லான் வல்லாளரக்கர் குலப்பாவை வாட முனிதன் வேள்வியைக் கல்விச் சிலையால் காத்தான். (8-6-3)

200 மல்லை முந்நீரதர்பட வரிவெஞ்சிலை கால் வளைவித்துக் கொல்லைவிலங்கு பணிசெய் யக் கொடியோனிலங்கை புகலுற்றுத் தொல்லை மரங்கள் புகப்பெய்து துவலை நிமிர்ந்து வானணவக் கல்லால் கடலை யடைத்தான். (8-6-4)

201 சேம மதிள் சூழிலங்கைக்கோன் சிரமுங் கரமுந்துணித்தான். (8-6-5)

202 திருந்தாவரக்கர் தென்னிலங்கை செந்தீ யுண்ணச் சிவந்தான். (8-6-6)

203 அலை நீரிலங்கைத் தசக்கிரீவற் கிளையோற் கரசையருளி முன் கலைமாச்சிலையா லெய் தான். (8-6-7)

204 விண்டவர்பட மதிளிலங்கைமுன் னெரி யெழக் கண்டவர். (8-7-5)

205 வையமெல்லா முடன்வணங்க வணங்கா மன்னனுய்த் தோன்றி வெய்ய சீற்றக் கடியிலங்கை குடி கொண்டோட வெஞ் சமத்துச் செய்த வெம்போர் நம்பரன். (8-8-7)

206 வானுளாரவரை வலிமையால் நலியும் மறி கட லிலங்கையார் கோனைப் பானு நேர் சரத்தால் பனங்கனி போலப் பருமுடியுதிர வில்வளைத்தோன். (9-1-7)

207 கலையுலாவல்குல் காரிகை திறத்துக் கடற் பெரும் படையொடுஞ்சென்று சிலையிரு லிலங்கை தீயெழச் செற்றான். (9-1-10)

208 வில்லா லிலங்கை மலங்கச் சரந்துரந்த வல்லாளன். (9-4-5)

209 தென்னிலங்கை மலங்கச் செற்றவன். (9-5-10)

210 சிரமுனைந்து மைந்தும் சிந்தச் சென்று அரக்கனுரமுங் கரமுந் துணித்தவுரவோன். (9-6-4)

211 சிலையாலிலங்கை செற்றான். (9-6-10)

212 சுடுசரமடு சிலைத்துரந்து நீர்மையிலாத தாடகைமாள நினைந்தவர். (9-8-4)

213 வணங்கலி லரக்கன் செருக்களத் தவிய மணிமுடி யொருபதும் புரள அணங்கெழுந் தவன்றன் கவந்தம் நின்றாட அமர் செய்த வடிகள். (9-8-5)

214 காவலனிலங்கைக்கிறை கலங்கச் சரம் செலவுய்த்து மற்றவன் ஏவலந்தவிர்த் தான். (9-10-6)

215 அங்கு வானவர்க் காகுலந்தீர அணி யிலங்கை யழித்தவன். (10-2-10)

216 இராவணற்குக் காலன். (10-3-3)

217 மணங்கள் நாறும் வார்குழலார் மாதர்களா தரத்தைப் புணர்ந்த சிந்தைப் புன்மை யாளன் பொன்றவரிசிலையால் கணங்க ளுண்ண வாளியாண்ட காவலன்.

218 கல்லின் முந்நீர் மாற்றிவந்து காவல்கடந்து இலங்கை அல்லல் செய்தான். (10-4-4)

219 கவளயானை பாய்புரவித் தேரோடரக்க ரெல்லாம் துவளவென்ற வென்றியாளன் தவளமாட நீடயோத்திக் காவலன்றன் சிறுவன். (10-3-8)

220 ஏடொத்தேந்தும் நீளிலைவே லிராவணனு ரோடிப் போக நின்றார். (10-3-9)

221 தெளியா வரக்கர் திறல் போயவிய மிடைத் திட்டெழுந்த குரங்கைப் படையா விலங் கல் புகப்பாய்ச்சி விம்மக் கடலையடைத் திட்டவன். (10-6-7)

222 நெறித்திட்ட மென்கூழை நன்னேரிழை யோடுடனாய வில்லென்ன வல்லேயதனை இறுத்திட்டவளின்ப மன்போடணைந்திட்டு இளங்கொற்றவனாய்த் துளங்காத முந்நீர் செறித்திட்டிலங்கை மலங்கவரக்கன் செழு நீண்முடி தோளொடு தாள் துணிய வறுத் திட்டவன். (10-6-8)

223 வரிந்திட்டவில்லால் மரமேழுமெய்து மலை போலுருவத் தொரிராக்கதி மூக்கரிந் திட்டவன். (10-6-9)

224 இலங்கை ஒள்ளெரிமண்டி யுண்ணப் பணித்த ஊக்கமுடையான். (10-9-1)

225 அரக்கியராகம் புல்லெனவில்லால் அணி மதிளிலங்கையார் கோனைச் செருக்கழித்த மரர் பணிய முன்னின்ற சேவகன். (10-9-6)

226 பெருந்தகைக்கிரங்கி வாலியை முனிந்த பெருமையான். (10-9-8)

227 அரக்கரை வென்ற வில்லியார். (11-1-1)

228 சென்றுவார் சிலைவளைத் திலங்கையை வென்ற வில்லியார். (11-1-6)

229 பொருந்து மாமரமேழுமெய்த புனிதனார். (11-2-4)

230 இலைமலி பள்ளியெய்தி யிதுமாயமென்ன இனமாய மான்பினெழில்சேர் அலைமலி வேற்கணாளை யகல்விப்பதற் கோருருவாய மானையமையாக் கொலைமலி வெய்துவித்த கோடியோனிலங்கை பொடியாக வென்றி யமருள் சிலைமலிசெஞ்சரங்கள் செலவுய்த்த நங்கள் திருமால். (11-4-7)

231 கொடியோனிலங்கை பொடியாச் சிலைகெழு செஞ்சரங்கள் செலவுய்த்த நங்கள் திருமால். (11-4-10)

232 மானமரு மென்னோக்கி வைதேவியின் துணையாக் கானமரும் கல்லதர் போய்க் காடுறைந்தான். (11-5-1)

## திருக்குறுந்தாண்டகம்

233 கடிமதிளிலங்கை செற்றவேறு. (2)

234 முன்பொலா விராவணன்றன் முதுமதிளி லங்கை வேவித்து அன்பினுலனுமன் வந் தாங்கடியிணை பணியநின்றான். (15)

235 மாயமான் மாயச்செற்றான். (16)

## திருநெடுந்தாண்டகம்

236 வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந் தான். (13)

237 வென்றசுரர் குலங்களைந்த வேந்தன். (16)

238 தேராளும் வாளரக்கன் செல்வம்மாளத் தென்னிலங்கைமுன் மலங்கச் செந்தீயொல் கிப் போராளன். (20)

239 தென்னிலங்கை யரண்சிதறியவுணன் மாளச்சென்றான். (28)

240 அலைகடலைக் கடைந்தடைத்த வம்மான் குன்றுதவலியரக்கர்கோனை மாளக் கொடுஞ் சிலைவாய்ச் சரந்துரந்து குலங்களைந்து வென்றான். (29)

## (மூன்றாவதாயிரம்) இயற்பா

## முதல் திருவந்தாதி

241 சிலையால் மராமரமேழ் செற்றான். (27)

242 பூமேய மாதவத்தோன்தாள் பணிந்த வாள ரக்கன் நீண்முடியைப் பாதமத்தாலெண் ணினான். (45)

243 நுடங்கிடையை முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொருநாள் தன் விலங்கை வைத்தான். (59)

244 மேலொருநாள் மான்மாய வெய்தான். (82)

## இரண்டாந் திருவந்தாதி

245 சீதையை மான்பின் போய் அன்று பிரிந் தான். (15)

246 இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால் சென்று இராவணனைக் கொன்றான். (25)

247 தென்னிலங்கை நீறாகவெய்தழித்தான். (29)

248 அன்று காரோதம் அடைத்தான். (30)

249 தோளிரண்டெட்டேழு மூன்றும் முடியனைத் தும் தாளிரண்டும் வீழச் சரந்துரந்தான். (43)

## மூன்றாந் திருவந்தாதி

250 இலங்காபுர மெய்தெரித்தான். (51)

251 எய்தான் மராமரமேழு மிராமனாய், எய் தானம் மான் மறியை ஏந்திழைக்காய், தென்னிலங்கைக் கோன்வீழ வெய்தான். (52)

252 வாளரக்கனேய்ந்த முடிப்போது மூன்றே ழன்றெண்ணினான். (77)

## நான்முகன் திருவந்தாதி

253 ஈசனை வென்றசிலைகொண்ட செங்கண்மால் சேராக்குலை கொண்ட விரைந்தலையா னிலங்கையை யிடழித்த கூரம்பன். (8)

254 தண் தாரிராவணனை ஊனொடுங்க வெய்தான். (28)

255 மிகப்புருவமொன்றுக் கொன்றேசனையான் வீழ ஒரு கணையெய்தான். (29)

256 தண்டவரக்கன் தலை தாளால் பண்டெண் ணிப் போங்குமரன். (44)

257 கல்லாதவரிலங்கை கட்டழித்த காகுத்தன் (53)

258 தடங்கடலைக் கற்கொண்டு தூர்த்த கடல் வண்ணன். (77)

259 கழிசினத்த வல்லாளன் வானரக்கோன் வாலி மதனழித்த வில்லாளன். (85)

## திருவிருத்தம்

260 இலங்கைக் குழா நெடுமாட மிடித்த பிரானுர். (36)

261 தென்பாலிலங்கை வெங்களஞ் செய்த நம் விண்ணேர் பிரானுர், (77)

262 பேணலமில்லா வரக்கர் முந்நீர பெரும்பதி வாய் நீணகர் நீளெரி வைத்தருளாயென்று விண்ணேர் தாணிலந்தோய்ந்து தொழுமூர்த்தி. (92)

## பெரிய திருவந்தாதி

263 சூழ்ந்தெங்கும் வாள்வரைகள் போலரக்கன் வன்தலைகள் தாமிடியத் தாள் வரைவில்லேந்திஞர். (17)

264 அன்றுதிருச் செய்யநேமியான் தீயரக்கி மூக்கும் பருச்செவியுமீர்ந்தபரன். (63)

265 மரமேழன்றெய்தான். (64)

266 சூட்டாய நேமியான் தொல்லரக்கனின் னுயிரை மாட்டேதுயரிழைத்த மாயவன். (66)

267 கணைநாணில் ஓவாத் தொழிற் சார்ங்கன், (78)

## திருவெழுகூற்றிருக்கை

268 ஒருமுறை இருசுடர் மீதினிலியங்கா மும் மதிளிலங்கை இருகால் வளைய ஒருசிலை யொன்றிய வீரெயிற்றழல்வாய் வாளியி லட்டான்.

## சிறிய திருமடல்

269 இலங்கை பொடி பொடியா விழ்த்தவன்.

270 தன் சீதைக்கு நேராவனென்றோர் நிசாசரி தான் வந்தாளைக் கூரார்ந்த வாளால் கொடிமூக்குங் காதிரண்டும் ஈராவிடுத்த வட்கு மூத்தோனை வெந்நரகம் சேரா வகையே சிலை குனித்தான். செந்துவர் வாய் வாரார் வனமுலையாள் வைதேவி காரணமா ஏரார்தடந்தோளிராவணனை ஈரைந்து சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்.

## பெரிய திருமடல்

271 போர்வேந்தன் தன்னுடையதாதை பணி யாலரசொழிந்து பொன்னகரம் பின்னே புலம்ப வளநாடு கைவிட்டுக்கொன்னவிலும் வெங்கானத்தூடு கொடுங்கதிரோன் துன்னு வெயில் வறுத்த வெம்பரல் மேல் பஞ்சடி யால் வைதேவி யென்றுரைக்கு மன்ன நடைய வணங்குடன் நடந்த மன்னனி ராமன்.

272 வண்ணம் போலன்ன கடலை மலையிட்டணை கட்டி மன்னனிராவணனை மாமண்டு வெஞ் சமத்துப் பொன்முடிகள் பத்தும் புரளச் சரந்துரந்து தென்னுலக மேற்றுவித்த சேவகன்.

273 தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப் பாவை மன்னனிராவணன்றன் நல்தங்கை வாளெயிற்றுத் துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகா சோர்வெய்திப் பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால் தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்தான், வாய்த்த மலைபோலும் தன்னிகரொன்றில்லாத தாடகையை மா முனிக்காத் தென்னுலக் மேற்றுவித்த திண்டிறலோன்.

## நான்காவதாயிரமாகிய திருவாய் மொழி

274 கூனே சிதைய உண்டைவில் தெறித் தான் (1-5-5)

275 சிலையேய் தழைய மராமரங்களேழு மெய்த சிரீதரன். (1-5-6)

276 நீள்கடல் சூழிலங்கைக் கோன்தோள்கள் தலை துணிசெய்தான். (1-6-7)

277 மராமர மெய்த மாயவன். (1-7-6)

278 தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான். (2-1-3)

279 அரக்கியை மூக்கீர்ந்தான். (2-3-6)

280 குழாங்கொள் பேரரக்கன் குலம் வீயமுனிந் தவன். (2-3-11)

281 அரக்கனிலங்கை செற்றான். இலங்கை செற்றவன். (2-4-3, 2-4-4)

282 கிளர்வாழ்வை வேவ விலங்கை செற்றான். (2-4-10)

283 தேம்பணைய சோலை மராமரமேழெய்தான். (2-5-7)

284 பாறிப் பாறியசுரர்தம் பல்குழாங்கள் நீறெழப் பாய்பறவை யொன்றேறி வீற்றி ருந்தான். (2-6-8)

285 இலங்கை செற்றான்; மராமரம் பைந்தாளே ழுருவ ஒருவாளி கோத்த வில்லான். (2-6-9)

286 இலங்கையரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான். (2-7-10)

287 ஏர் கொளிலங்கை நீறே செய்த நெடுஞ் சுடர்ச் சோதி. (2-9-10)

288 தென்னிலங்கை யெரியெழச் செற்ற வில்லி. (3-6-2)

289 தயரதற்கு மகன். (3-6-8)

290 தண்ணிலங்கைக்கிறையைச் செற்ற நஞ் சன். (3-8-2)

291 சன்மம் பலபல செய்து வெளிப்பட்டுச் சங் கொடு சக்கரம் வில் ஒண்மையுடையவுலக் கை ஒள்வாள் தண்டு கொண்டு புள்ளூர்ந்து உலகில் வன்மையுடைய வரக்கரசுரரை மாளப்படை பொருத நன்மையுடையவன். (3-10-1)

292 கொம்புபோல் சீதை பொருட்டிலங்கை நகர் அம்பெரியுய்த்தவர். (4-2-8)

293 மதிளிலங்கைக் கோவை வீயச் சிலை குனித் தான். (4-3-1

294 கிடந்து நின்றும் கொண்ட கோலத்தொடு வீற்றிருந்து மணங்கூடியும் கண்ட வாற் றால் தன்தேயுலகென நின்றான். (4-5-10

295 குலங்குலமாவசுரர்களை நீறாகும்படியாக நிருமித்துப் படை தொட்ட மாறாளன். (4-8-1)

296 தளிர் நிறத்தால் குறைவில்லாத் தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள் காரணமாக் கிளரரக்கன் நகரெரித்த களி மலர்த் துழாயலங்கல் கமழ் முடியன். (4-8-5)

297 காயுஞ் கடுஞ்சிலைக் காகுத்தன். (5-4-3)

298 கொடியானிலங்கை செற்றான். (5-6-9)

299 இலங்கை செற்ற வம்மான். (5-7-3)

300 மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்று கந்த ஏறு சேவகனார். (6-1-10)

301 மன்னுடையிலங்கை யரண்காய்ந்த மாயவன். (6-1-10)

302 காண்பெருந் தோற்றத்துக் காகுத்த நம்பி. (6-6-9)

303 ஆவா வென்னாதுலகத்தை யலைக்குமசுரர் வாணாள்மேல் தீவாய் வாளிமழைபொழிந்த சிலையன். (6-10-4)

304 புணரா நின்ற மரமேழன்றெய்த வொருவில் வலவன். (6-10-5)

305 அடலாழி யேந்தி யசுரர்வன்குலம் வேர் மருங்கறுத்தான். (7-1-5)

306 காகுத்தன். (7-2-3)

307 பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்ற பிரான். (7-3-7)

308 மாறு நிரைத்திரைக்கும் சரங்கள் இனநூறு பிணம்மலைபோல் புரளக் கடலாறு மடுத்து உதிரப் புனலா நிறுபட இலங்கை செற்ற வப்பன். (7-4-7)

309 புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யொன் றின்றியே நற்பாலயோத்தியில் வாழும்சரா சரம் முற்றவும் நற்பாலுக்குய்த்த விராம பிரான். (7-5-1)

310 நாட்டைநலியு மரக்கரை நாடித்தடிந்திட்டு நாட்டையளித்து உய்யச்செய்தான் (7-5-2)

311 ஆளியைக்காண் பரியாய் அரிகாண் நரி யாய் அரக்கருளையிட்டன் றிலங்கை கடந்து பிலம்புக் கொளிப்ப மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக் கொன்று பின்னும் ஆளுயர் குன்றங்கள் செய்தடர்த்தான். (7-6-8)

312 ஆண்டிறல் மீளிமொய்ம்பினரக்கன் குலத் தைத் தடிந்து மீண்டுமவன் தம்பிக்கே விரிநீரிலங்கையருளி ஆண்டுதன் சோதி புக்க வமரரரியேறு (7-6-9)

313 அமரது பண்ணி யகலிடம் புடைசூழடு படையவித்த வம்மான்.

314 செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை யுருக் கெட வாளி பொழிந்தவொருவன். (8-6-2)

315 புகழும் பொருபடையேந்திப் போர்புக்க சுரரைப் பொன்றுவித்தான். (8-9-3)

316 கணையொன்றுலே யேழ் மரமுமெய்த வெங் கார்முகில். (9-1-2)

317 காய்சினப் பறவை யூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல் மாசின மாலி மாலி மானென்றங் கவர்படக் கனன்று முன்னின்ற காய்சின வேந்து. (9-2-6)

318 கூற்றமாயசுரர் குலமுதலரிந்த கொடு வினைப் படைகள் வல்லான். (9-2-9)

319 என்னுருயிர்க்காகுத்தன். (9-5-6)

320 பெயர்களாயிரமுடைய வல்லரக்கர் புக்க முந்தத் தயரதன் பெற்ற மரகத மணித் தடம். (10-1-8)

இராமன் பாமாலை முற்றிற்று.

## ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன்
## பெரியாழ்வார்
## திருப்பல்லாண்டு

1 மல்லாண்ட திண்டோள் மணிவண்ணன், (1)

2 மாயப் பொருபடைவாணனை ஆயிரந் தோளும் பொழிகுருதி பாயச் சுழற்றிய ஆழிவல்லான். (7)

3 திருமதுரையுட் சிலைகுனித்தைந் தலைய பைந்நாகத் தலைப் பாய்ந்தவன். (10)

## பெரியாழ்வார் திருமொழி

4 வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க் கண்ணன் (1-1-1)

5 சீருடைப் பிள்ளை, திருவோணத்தான். (1-1-3)

6 ஆயர் புத்திரனல்லாத அருந்தெய்வம், பாயசீருடைப் பண்புடைப் பாலகன், மாயன். (1-1-7)

7 மத்த மாமலைதாங்கிய மைந்தன். (1-1-8)

8 கோதைக்குழலாள் அசோதைக்குப் போத்தந்த பேதைக் குழவி (1-2-1)

9 பணைத்தோளிளவாய்ச்சி பால் பாய்ந்த கொங்கை அணைத்தார வுண்டு கிடந்த பிள்ளை. (1-2-3)

10 உழந்தாள் நறுநெய் ஒரோதடாவுண்ண இழந்தாள் எரிவினுல் ஈர்த்தெழில் மத்தின் பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான். (1-2-4)

11 பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு உறங்குவான் போலே கிடந்த பிள்ளை. (1-2-5)

12 மத்தக்களிற்று வசுதேவர் தம்முடைச் சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில் அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன். (1-2-6)

13 இருங்கைம் மதகளிறீர்க்கின்றவனைப் பருங்கிப் பறித்துக் கொண்டோடும் பரமன். (1-2-7)

14 வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து தந்தக் களிறுபோல் தானே விளையாடும் நந்தன் மதலை. (1-2-8)

15 பெருமா வுரலில் பிணிப்புண்டிருந்து அங்கிருமாமருதமிறுத்த பிள்ளை. (1-2-10)

16 நாள்களோர் நாலைந்து திங்களளவிலே தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய் வாள் கொள் வளை யெயிற்றுருயிர் வவ்விஞன். (1-2-11)

17 மைத்தடங் கண்ணி அசோதை வளர்க்கின்ற செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை. (1-2-12)

18 வண்டமர் பூங்குழல் ஆய்ச்சி மகனுகக் கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டன். (1-2-13)

19 நோக்கியசோதை நுணுக்கிய மஞ்சளால் நாக்கு வழித்து நீராட்டும் நம்பி. (1-2-15)

20 வசுதேவர் தம்மகனுய் வந்து திண்கொளசுரரைத் தேய வளர்ந்தவன். (1-2-16)

21 திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற உருவு கரிய ஒளிமணி வண்ணன். (1-2-17)

22 மண்ணும் மலையும் கடலுமுலகேழு முண்ணுந் திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளை. (1-2-18)

23 முற்றிலும் தூதையும் முன் கைமேல் பூவையும் சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களைப் பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன். (1-2-19)

24 அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப மழகன்றினங்கள் மறித்துத் திரிவான். (1-2-20)

25 வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட அஞ்சன வண்ணன். (1-3-10)

26 தன்முகத்துச் சுட்டிதூங்கத் தவழ்ந்து போய்ப் பொன்முகக் கிண்கிணி யார்ப்பப் புழுதியளைந்தவன். (1-4-1)

27 தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய பேழை வயிற்றெம்பிரான். (1-4-9)

28 மைத்தடங் கண்ணியசோதை தன் மகன் (1-4-10)

29 மேலை யமரர்பதிமிக்கு வெகுண்டு வரக் காளநன் மேகமவை கல்லொடுகார்பொழியக் கருதி வரைக்குடையாக் காலிகள் காப்பவன். (1-5-2)

30 வானவர் தாம் மகிழ வன்சகடமுருள வஞ்ச முலைப்பேயின் நஞ்சமது உண்டவன். (1-5-4)

31 கானக வல்விளவின் காயுதிரக்கருதிக் கன்றது கொண்டெறியும் கருநிறக்கன்று. (1-5-4)

32 தேனுகனும் முரனும் திண்திறல் வெந்நரகன் என்பவர்தாம் மடியச் செருவதிரச் செல்லுமானை. (1-5-4)

33 மத்தளவும் தயிரும் வார்குழல் நன்மடவார் வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி ஒருங்கொதத விணைமருத முன்னிய வந்தவரை ஊருகரத்திஞெடு முந்திய வெந்திறலோன். (1-5-5)

34 கானகமாமடுவில் காளியனுச்சியிலே தூய நடம் பயிலும் சுந்தரன் (1-5-6)

35 துங்கமதக்கரியின் கொம்பு பறித்தவன்.

36 ஆய மறிந்து பொருவானெதிர்வந்த மல்லை அந்தரமின்றி யழித்தாடிய தாளிணையான்.

37 நப்பினை தன்திறமா நல்விடையேழவிய நல்ல திறலுடைய நாதன். (1-5-7)

38 தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத் தனியொருதேர் கடவித்தாயொடு கூட்டிய வப்பன். (1)

39 சட்டித்தயிரும் தடாவினில் வெண்ணெயுமுண் பட்டிக் கன்று. (1-6-5)

40 மன்னர்படப் பஞ்சவர்க்கன்று தேருய்த்தவன். (1-6-6)

41 புகழ்ப்பலதேவ னென்னும் தன்னம்பியோடப் பின்கூடச் செல்வான். (1-7-5)

42 மக்களுலகினில் பெய்தறியா மணிக்குழவியுருவின் தக்கமாமணி வண்ணன் வாசுதேவன். (1-7-8)

43 பஞ்சவர் தூதனாய்ப் பாரதங் கை செய்தவன்.

44 நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சன வண்ணன். (1-8-3

45 நாறிய சாந்தம் நமக்கிறை நல்கென்னத் தேறியவளும் திருவுடம்பிற் பூச ஊறிய கூனினை யுள்ளேயொடுங்க ஏறவுருவினுன். (1-8-4)

46 கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி எழலுற்றுமீண்டே யிருந்துன்னை நோக்குஞ் சுழலைப்பெரிதுடைத்துச்சோதனை யழல விழித்தான். (1-8-5)

47 பூமிப் பொறை தீர்ப்பான் தேரொக்கவூர்ந்தான், காரொக்கு மேனிக் கரும்பெருங் கண்ணன். (1-8-6)

48 தரணியில் வேந்தர்களுட்க விசயன் மணித்திண்டேரூர்ந்தவன். (1-9-4)

49 பொத்தவுரலைக் கவிழ்த்து அதன்மேலேறித் திறந்த பாலுந் தடாவினில் வெண்ணெயும் மெத்தத் திருவயிரூர விழுங்கிய வத்தன். (1-9-7)

50 மூத்தவை காண முதுமணற் குன்றேறிக் கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி வாய்த்த மறையோர் வணங்க இமையவரேத்த நின்றவெம்பிரான். (1-9-8)

51 கற்பகக்காவு கருதிய காதலிக் கிப்பொழுதீவனென்றிந்திரன் காவினில் நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துளுய்த்தவன். (1-9-9)

52 மெச்சூது சங்கமிடத்தான் நல்வேய்ஊதி பொய்ச் சூதில் தோற்ற பொறையுடை மன்னர்காய்ப் பத்தூர் பெருதன்று பாரதங் கைசெய்தவத்தூதன். (2-1-1)

53 மலைபுரைத்தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்தேர் மேல் முன்னின்றான். (2-1-2)

54 காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன் தீய பயணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி வேயின் குழலூதி வித்தகனாய் நின்ற வாயன். (2-1-3)

55 இருட்டில் பிறந்து போயேழை வல்லாயர் மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப் புரட்டியவன்.

56 அந்நாளாய்ச்சியர் பூம்பட்டுக் கொண்ட வரட்டன். (2-1-4)

57 நந்தன் மனைவி கடைதாம்பால் சோப் பூண்டு துள்ளித்துடிக்கத் துடிக்க வாப் புண்டான். (2-1-5)

58 துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய வப்பன். (2-1-5)

59 அசோதை இளஞ்சிங்கம், கொத்தார் கருங் குழல் கோபாலகோளரி யத்தன். (2-1-7)

60 கஞ்சனை வஞ்சனையால் வலைப்படுத்தினான். (?-2-3)

61 இருமலை போலெதிர்ந்த மல்லிருவர் அங்க மெரிசெய்தான். (2-2-8)

62 பேய்ப்பால் முலையுண்ட பித்தன். (2-2-1)

63 மலையையெடுத்து மகிழ்ந்து கன்மாரி காத்துப் பசு நிரை மேய்த்தான். (2-3-7)

64 ஏர்விடை செற்றிளங்கன் றெறிந்திட்ட இருடீகேசன். (2-3-10)

65 சகடமுதைத்திட்ட பற்பநாபன். (2-3-11)

66 முன்வஞ்ச மகளைச் சாவப் பாலுண்டு சகடிறப்பாய்ந்திட்ட தாமோதரன். (2-3-12)

67 கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகட முதைத்து வஞ்சகப் பேய்மகள் துஞ்ச வாய் முலைவைத்த பிரான். (4-4-2)

68 எண்ணெய்க்குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்துக்கழை கண்டு செய்யும் பிரான். (2-4-5)

69 கன்றினை வாலோலை கட்டிக் கனிகளுதிர வெறிந்து பின்தொடர்ந் தோடியோர் பாம்பைப் பிடித்துக் கொண்டாட்டினான். (2-4-7)

70 பேயின் முலையுண்டபிள்ளை, மாயச்சகடும் மருதுமிறுத்தவன். (2-5-2)

71 திண்ணக்கலத்துத் திரையுறிமேல் வைத்த வெண்ணெய் விழுங்கி விரையவுறங்கிடு மண்ணலமரர் பெருமான். (2-5-3)

72 பள்ளத்தில் மேயும் பறவையுருக் கொண்டு கள்ளவசுரன் வருவானைத் தான் கண்டு புள்ளிது வென்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட பிள்ளை. (2-5-4)

73 கற்றினம் மேய்த்துக் கனிக்கொரு கன்றினைப் பற்றியெறிந்த பரமன். (2-5-5)

74 கிழக்கிற் குடிமன்னர் கேடிலாதாரை யழிப்பான் நினைந்திட்டு அவ்வாழியதனால் விழிக்குமளவிலே வேரறுத்தான். (2-5-6)

75 வேலிக்கோல் வெட்டி விளையாடு வில்லேந்தித்தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு பிலித்தழையைப் பிணைத்துப் பிற கிட்டுக் காலிப்பின் போவான். (2-6-1)

76 கறுத்திட்டெதிர் நின்ற கஞ்சனைக் கொன்றான், பொறுத்திட் டெதிர்வந்த புள்ளின் வாய்கீண்டான், நெறித்த குழல்களை நீங்க முன்னோடிச் சிறுக்கன்று மேய்ப்பான். (2-6-3)

77 ஒன்றே யுரைப்பான் ஒரு சொல்லே சொல்வான். பாரதங் கையெறிந்தான். (2-6-4)

78 பாரதங் கைசெய்து பார்த்தற்குத் தேரொன்றை யூர்ந்தான். (2-6-4)

79 பாலப்பிராயத்தே பார்த்தற்கருள் செய்த கோலப்பிரான். (2-6-6)

80 தேனிலினிய பிரான். (2-7-1)

81 மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம் மிடம்புக்குச் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வான். (2-7-3)

82 புள்ளினை வாய் பிளந்திட்டான், பொரு கரியின் கொம்பொசித்தான். (2-7-5)

83 கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால் கொடு பாய்ந்தான், தெருவின்கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்ற பொன். (2-7-6)

84 குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்ல கோ. மடங்கொள் மதிமுகத்தாரை மால் செய்யவல்ல மைந்தன். (2-7-7)

85 சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லான் சாமாறவனை யெண்ணிச் சக்கரத் தால் தலை கொண்டான். (2-7-8)

86 கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதை செய்த பிள்ளையரசு. (2-8-7)

87 கஞ்சன் கறுக்கொண்டு வஞ்சிப்பதற்கு விடுத்த கருநிறச் செம்மயிர்ப் பேயைப் பிடித்து முலையுண்ட பரமன். (2-8-6, 2-8-7)

88 கும்பக்களிறட்டகோ கொடுங்கஞ்சன் நெஞ் சினில் கூற்று. (2-7-8)

89 வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அதனோசை கேட்கும் கண்ணபிரான். (2-9-1)

90 வளைதுகில் கைக்கொண்டு காற்றிற்கடிய ஞயோடியகம்புக்கு மாற்றமும் தாரான். (1-10-2)

91 வண்டமர் பூங்குழலார் துகில்கைக்கொண்டு விண்டோய் மரத்தான். (1-10-2)

92 தடம்படு தாமரைப் பொய்கை கலக்கி விடம்படு நாகத்தை வால்பற்றியீர்த்துப் படம்படு பைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு உடம்பையசைத்தான். (2-10-3)

93 தேனுகனுவி செகுத்துப் பனங்கனி தானெ றிந்திட்ட தடம் பெருந் தோளினால் வான வர்கோன் விடவந்த மழைதடுத்து ஆனிரை காத்தான். (2-10-4)

94 ஆய்ச்சியர்சேரி அளைதயிர் பாலுண்டு பேர்த் தவர் கண்டுபிடிக்கப் பிடியுண்டு வேய்த்தடந் தோளினார் வெண்ணெய் கொள்மாட்டா தங்காப் புண்டிருந்தான். (2-10-5)

95 தள்ளித் தளர்நடையிட் டிளம்பிள்ளையாய் உள்ளத்தினுள்ளே அவளையுற நோக்கிக் கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலையுயிர் துள்ளச் சுவைத்தான். (2-10-6)

96 தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளிர்நடை யிட்டு வருவான் பொன்னேய் நெய்யோடு பாலமுதுண்டு ஒரு புள்ளுவன் பொய்யே தவழும் மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை துஞ்ச வாய் வைத்த பிரான். (3-1-1)

97 வன்பாரச்சகட மிறச்சாடி வடக்கிலகம்புக் கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்து வைத்த அன்பன். (3-1-2)

98 கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப் பருகிப் பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்தான். (3-1-3)

99 மையார் கண் மடவாய்ச்சியர் மக்களை மையன்மை செய்து அவர்பின் போய்க் கொய்யார் பூந்துகில் பற்றித் தனிநின்று குற்றம் பலபல செய்தான். (3-1-4)

100 முப்போதும் கடைந்தீண்டிய வெண்ணெயி னொடு தயிரும் விழுங்கிக் காப்பாலாயர்கள் காவிற் கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப் பருகி மெய்ப்பாலுண்டமூ பிள்ளைகள் போல விம்மி விம்மி யழுகின்றவப்பன். (3-1-5)

101 கரும்பார் நீள்வயல் காய்க்கதிர்ச் செந் நெலைக் கற்றுநிரை மண்டித் தின்ன விரும் பாக்கன்றொன்று கொண்டு விளங்கனி விழவெறிந்த பிரான். (3-1-6)

102 சுரும்பார் மென்குழல் கன்னியொருத்திக்குச் சூழ்வலை வைத்துத் திரியுமரம்பன். (3-1-6)

103 சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து சுற்றுந்தொழ நின்ற சோதி. (3-1-7)

104 பிறர் மக்களை மையன்மை செய்து தோளா விட்டவரோடு திளைத்துச் சொல்லப் படாதன செய்தான். (3-1-8)

105 காய்வார்க்கென்று முகப்பனவே செய்து கண்டார் கழறத்திரியு மாயன். (3-1-9)

106 தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத் தடங்கொண்டு புக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தான். (3-1-10)

107 அஞ்சன வண்ணன், ஆயர் கோலக் கொழுந்து. (3-2-1)

108 பற்று மஞ்சள் பூசிப் பாவைமாரொடு பாடி யில் சிற்றில் சிதைத்தெங்கும் தீமை செய்து திரிவான். (3-2-2)

109 நன்மணிமேகலை நங்கைமாரொடு நாள் தொறும் பொன் மணி மேனி புழுதியாடித் திரிவான். (3-2-3)

110 வண்ணக் கருங்குழல் மாதர்வந்தலர் பண்ணிப்பல செய்து ஆய்ப்பாடியெங்கும் திரிவான். (3-2-4)

111 அவ்வவ்விடம் புக்கு அவ்வாயர் பெண்டிர்க் கணுக்கனுய்க் கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்வான். (3-2-5)

112 மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப் போய்ப் படிறு பல செய்து ஆய்ப்பாடி யெங்குந்திரிவான். (3-2-6)

113 வள்ளி நுடங்கிடைமாதர் வந்தலர் தூற் றிடத் துள்ளி விளையாடித் தோழரோடு திரிவான். (3-2-7)

114 பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்டவப் பாங்கினால் அசோதை யமுதூட்டி யெடுத்த இளஞ்சிங்கம். (3-2-8)

115 குடையும் செருப்பும் கொடாதே கடிய வெங்கானிடைக் காலடி நோவக் கன்றின் பின் போக்கிய பிள்ளை. (3-2-9)

116 பேடைமயிற் சாயல் பின்னைமணாளன் (3-3-3)

117 பற்றார் நடுங்க முன் பாஞ்ச சன்னியத்தை வாய்வைத்த போரேறு. (3-3-5)

118 பொய்கைபுக்கு நஞ்சுமிழ் நாகத்தினோடு பிணங்கினான். (3-3-6)

119 கன்றினுருவாகி மேய்புலத்தே வந்த கள்ள வசுரன் தன்னைச் சென்று பிடித்துச் சிறுக் கைகளாலே விளங்காயெறிந்தான். (3-3-7)

120 கோவலரிந்திரற்குக் காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்துடனுண்டான். (3-3-8)

121 அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும் அடங்கப் பொட் டத்துற்றி மாரிப்பகை புணர்த்த பொருமா கடல் வண்ணன். (3-5-1)

122 செப்பாடுடைய திருமாலவன். (3-5-6)

123 தடங்கை விரலைந்தும் மலர வைத்துத் தடவரை தாங்கு தாமோதரன். (3-5-7)

124 வன்பேய் முலையுண்டதோர் வாயுடையன். (3-5-9)

125 வானிளவரசு வைகுந்தக் குட்டன் வாசு தேவன் மதுரை மன்னன் நந்தர் கோனிள வரசு கோவலர் குட்டன் கோவிந்தன். (3-6-3)

126 தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப் பூடுகளடங்கவுழக்கிக் கானகம்படி யுலாவி யுலாவிக் குழலூதின கருஞ் சிறுக்கன். (3-6-4)

127 செம்பெருந்தடங் கண்ணன் திரடோளன் தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம். (3-6-6)

128 அருங்கலவுருவினாயர் பெருமான். (3-6-10)

129 மல்லரையட்டவன். (3-8-1)

130 சாடிறப் பாய்ந்த பெருமான். (3-8-6)

131 நந்தகோபன் மகன் கண்ணன். (38—8)

132 என்னுதன் தேவிக்கு அன்றின்பப் பூவியா தாள் தன்னுதன் காணவே தண் பூமரத் தினை வன்னுதப் புள்ளால் வலியப்பறித் திட்ட என்னுதன். (3-9-1)

133 உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து செருக்குற்றான் வீரஞ்சிதையத் தலை யைச் சிரைத்திட்டான். (3-9-3)

134 பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கை செய்து நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சனவண்ணன். (3-9-5)

135 காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண் முடியைந்திலும் நின்று நடஞ் செய்து மீளவவனுக்கருள் செய்தவித்தகன். (3-9-7)

136 மாயச்சகடமுதைத்து மருதிறுத்து ஆயர்க ளோடு போய் ஆநிரைகாத்து அணி வேயின் குழலூதி வித்தகனாய் நின்ற ஆயர்களேறு. (3-9-9)

137 கொலையானைக் கொம்பு பறித்தான். (4-1-3)

138 ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல்விடை யேழினையும் வியப்பொருது வியர்த்து நின்றான். (4-1-4)

139 வாரேறு கொங்கையுருப்பிணியை வலியப் பிடித்துக் கொண்டு தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்தான். (4-1-5)

140 பொல்லா வடிவுடைய பேய்ச்சிதுஞ்சப் புணர்முலை வாய்மடுக்க வல்லான் பல்லா யிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை எல்லாரும் சூழச்சிங்காசனத்தே யிருந்தான். (4-1-6)

141 வெள்ளைப் புரவிக்குரக்கு வெல் கொடித்தேர் மிசை முன்பு நின்று கள்ளப்படைத் துணை யாகிப் பாரதம் கைசெய்தான்.

142 நாழிகை போகப்படை பொருதவன் தேவகி தன் சிறுவன், ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையைப் பாழிலுருளப் படை பொருதவன். (4-1-8)

143 ஆனாயர் கூடியமைத்த விழவை அமரர்தம் கோனார்க் கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான். (4-2-4)

144 கஞ்சன் தன் ஒருவாரண முயிருண்டவன். (4-2-5)

145 ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத்தகர்த்த சாந்தணிதோள் சதுரன். (4-2-6)

146 மன்னர் மறுக மைத்துனன் மார்க்கொரு தேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன். (4-2-7)

147 எட்டுத் திசையுமெண்ணிறந்த பெருந்தேவி மார் விட்டுவிளங்க விற்றிருந்த விமலன். (4-2-10)

148 உருப்பிணிநங்கை தன்னை மீட்பான் தொடர்ந்தோடிச் சென்ற வுருப்பனை யோட்டிக் கொண்டிட் டுறைத்திட்ட வுறைப்பன். (4-1-3)

149 கஞ்சனும் காளியனும் களிறும் மருது மெருதும் வஞ்சனையில் மடிய வளர்ந்த மணிவண்ணன். (4-3-2)

150 மன்னுநரகன் தன்னைச் சூழ்போகிவளைத் தெறிந்து கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்த கடல் வண்ணன். (4-3-3)

151 மாவலி தன்னுடைய மகன் வாணன் மகளி ருந்த காவலைக் கட்டழித்த தனிக்காளை. (4-3-4)

152 பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை அலவலைமை தவிர்த்த வழகன். (4-3-5)

153 பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்க மெல்லாம் ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தவப்பன். (4-3-6)

154 குருந்தமொசித்தான் றெருசித்தான். (4-4-7)

155 சாடிறப்பாய்ந்த தலைவன், தாமோதரன். (4-6-6)

156 கண்ணுக்கினிய கருமுகில் வண்ணன். (4-6-7)

157 செம்பெருந் தாமரைக் கண்ணன். (4-6-8)

158 தலைப்பெய்து குமுறிச் சலம் பொதிமேகஞ் சலசல பொழிந்திடக் கண்டு மலைப்பெருங் குடையால் மறைத்தவன், மதுரைமால். (4-7-6)

159 விற்பிடித்திறுத்து வேழத்தை முறுக்கி மேலிருந்தவன் தலைசாடி மற்பொருதெழப் பாய்ந்தரையனை யுதைத்தமால். (4-7-7)

160 திரைபொரு கடல்சூழ் திண்மதிள் துவரை வேந்து, தன் மைத்துனன்மார்க்காய் அரசினையவிய அரசினை யருளுமரி. (4-7-8)

161 மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல் வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்தான். (4-8-1)

162 பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்து ஒருப்படுத்த வுறைப்பன். (4-8-2)

163 மருமகன்றன் சந்ததியை யுயிர்மீட்டு மைத் துனன்மார் உருமகத்தே விழாமே குருமுக மாய்க் காத்தான். (4-8-3)

164 கருளுடையபொழில் மருதுங் கதக்களிறும் பிலம்பனையும் கடியமாவும் உருளுடைய சகடரையும் மல்லரையுமுடைய விட் டோசை கேட்டான். (4-9-3)

165 பதினாறுமாயிரவர் தேவிமார் பணி செய்யத் துவரை யென்னுமதில் நாயகராகி விற்றி ருந்த மணவாளர். (4-9-5)

166 மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப் பித்து அவர்களையே மன்னராக்கி உத்தரை தன் சிறுவனையுமுய்யக் கொண்ட வுயிராளன். (4-9-6)

167 குன்றெடுத்தா நிரைகாத்த ஆயன், கோ நிரை மேய்த்தவன். (4-10-9)

168 கொடுமைக் கஞ்சனைக் கொன்று தன்தாதை கோத்த வன் தளைகோள் விடுத்தான். (5-1-4)

169 குஞ்சரம் விழக் கொம்பொசித்தான். (5-1-5)

170 வண்ணமால் வரையே குடையாக மாரி காத்தவன். கனிறுட்ட பிரான். (5-1-9)

171 மக்களறுவரைக் கல்லிடைமோத விழந்த வள்தன் வயிற்றில் சிக்கென வந்து பிறந்து நின்ருன். (5-0-1)

172 தூது சென்ருன் குருபாண்டவர்க்காய் அங்கோர் பொய்ச்சுற்றம் பேசிச்சென்று பேதஞ் செய்தெங்கும் பிணம்படுத்தான். (5-3-5)

173 மைத்துனன்மார்களை வாழ்வித்து மாற்றலர் நூற்றுவரைக் கெடுத்தான். (5-3-9)

174 சென்றங்கு வாணனையா யிரந்தோளுந் திருச் சக்கரமதனுல் தென்றித் திசை திசை வீழச்செற்ருன். (5-3-10)

175 மருப்பொசித்தான், மல்லடர்த்தான் (5-4-7)

176 வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன், கொழுங்குளிர் முகில்வண்ணன், ஆயரேறு (5-4-11)

## திருப்பாவை

177 கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்; ஏரார்ந்த கண்ணி யசோதையிளஞ் சிங்கம்; கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான். (1)

178 மாயன்; மன்னு வடமதுரை மைந்தன்; தூயபெருநீர் யமுனைத் துறைவன்; ஆயர் குலத்தினில் தோன்றுமணி விளக்கு; தாயைக் குடல் விளக்கஞ் செய்த தாமோதரன். (5)

179 பேய்முலை நஞ்சுண்டு கள்ளச்சகடம் கலக் கழியக் காலோச்சி வெள்ளத்தரவில் துயில மர்ந்த வித்து. (6)

180 மாவாய் பிளந்தான்; மல்லரை மாட்டிய தேவாதி தேவன். (8)

181 புள்ளின் வாய் கீண்டான். (13)

182 சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன், பங்கயக்கண்ணன். (14)

183 வல்லானை கொன்ருன்; மற்ருரை மாற்ற ழிக்க வல்லான்; மாயன். (15)

184 குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில் மேல் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக் கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பன். (19)

185 வள்ளல் பெரும் பசுக்களாற்றப் படைத் தான் மகன். (21)

186 பொன்றச் சகடமுதைத்தான்; கன்று குணிலாவெறிந்தான், குன்று குடையா வெடுத்தான். (24)

187 ஒருத்தி மகனய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனுயொளித்து வளரத் தரிக்கிலானுகித் தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப் பித்துக் கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால். (25)

188 கூடாரை வெல்லுஞ் சீர்க்கோவிந்தன். (27)

189 குறைவொன்று மில்லாத கோவிந்தன். (28)

190 பெற்றம் மேய்த்துண்ணுங் குலத்தில் பிறந்தவன். (29)

## நாச்சியார் திருமொழி

191 ஓர் கரியலற மருப்பினை யொசித்துப் புள் வாய் பிளந்த மணிவண்ணன். (1-10)

192 குதி கொண்டரவில் நடித்தான். (3-2)

193 குடத்தை யெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லவெங்கோ. (3-6)

194 கோமளவாயர் கொழுந்து. (3-8)

195 கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து • நெஞ்சு துக்கஞ் செய்யப்போந்தான், வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட மசுமையிலி. (3-9)

196 அணிவாணுதல் தேவகிமாமகன்; மிகுசீர் வசுதேவர் தங்கோமகன். (4-3)

197 ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிடப்பூத்த நீள் கடம்பேறிப் புகப்பாய்ந்து வாய்த்த காளியன் மேல் நடமாடிய கூத்தன். (4-4)

198 ஓடைமாமத யானையுதைத்தவன். (4-5)

199 மருத முறிய நடை கற்றவன், கஞ்சனை வஞ்சனையில் செற்றவன், திகழும் மதுரைப் பதிக்கொற்றவன். (4-6)

200 அன்றின்னுதன செய் சிசுபாலனும் நின்ற நீள் மருதுமெருதும் புள்ளும் வென்றிவேல விறற்கஞ்சனும் வீழ முன் கொன்றவன். (4-7)

201 ஆவலன்புடையார் தம் மனத்தன்றி மேவலன்; விரைசூழ் துவராபதிக்காவலன்; கன்று மேய்த்து விளையாடுங் கோவலன். (4-8)

202 அணியாச்சியர் சிந்தையுள் குழகனுர். (4-10)

203 மதுரையார் மன்னன். (6-5)

204 மருப்பொசித்த மாதவன். (7-1)

205 வடமதுரையார் மன்னன்; வாசுதேவன். (7-3)

206 செங்கட்கருமேனி வாசுதேவன் (7-7)

207 கண்ணுலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான் திண்ணுர்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து அண்ணுந்திருக்கவே யாங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன். (11-9)

208 கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானேர் மகன். (12-3)

209 நீர்க்கரை நின்ற கடம்பை யேறிக் காளியனுச்சியில் நட்டம் பாய்ந்து போர்க்களமாக நிருத்தஞ் செய்தான். (12-3)

210 பத்தவிலோசனத்து வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசி லுண்ணும்போதீதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்வான். (12-6)

211 கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப் பெற்றுன், காடுவாழ் சாதியுமாகப் பெற்றுன், பற்றியுரலிடையாப்பு முண்டான், காலிகளுய்ய மழை தடுத்துக் கோவர்த்தனங் கொற்றக் குடையாக வேந்தி நின்றுன். (12-8)

212 கண்ணனென்னுங் கருந்தெய்வம். (13-1)

213 கோலால் நிரை மேய்த்த ஆயன். (13-2)

214 கஞ்சைக்காய்ந்த கருவில்லி. (13-3)

215 ஆயர்பாடி கவர்ந்துண்ணுங்காரேறு. (13-4)

216 தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே குழலூதி வருகின்ற நெடுமால். (13-5)

217 நந்தகோபன் மகனென்னுங் கொடிய கடிய திருமால். (13-6)

218 கொள்ளை கொள்ளிக் குறும்பன், கோவர்த்தனன். (13-8)

219 அல்லல் விளைத்த பெருமான்; ஆயர்பாடிக் கணிவிளக்கு (13-10)

220 பட்டிமேய்ந்தோர் காரேறு; பலதேவர்க்கோர் கீழ்க்கன்று, இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி விட்டுக்கொண்டு விளையாடுவான். (14-1)

221 ஆயர்பாடி கவர்ந்துண்ணும் குணுங்கு நாறும் குட்டேறு; கோவர்த்தனன். (14-2)

222 மாலாய்ப பிறந்த நம்பி; மாலேசெய்யும் மணாளன்; ஏலாப் பொய்களுரைப்பான், (14-3)

223 போர்த்த முத்தின்குப்பாயப் புகர்மால் யானைக் கன்றேபோல் வேர்த்து நின்று விளையாடுவான். (14-4)

224 பீதகவாடை யுடைதாழப பெருங்கார்மேகக் கன்றேபோல் வீதியாரவருவான். (14-5)

225 தருமமறியாக்குறும்பன்; தன்கைச்சார்ங்க மதுவேபோல் புருவவட்டமழகிய பொருத்தமிலி; உருவுகரிதாய் முகம் செய்தாய் உதய பருப்பதத்தின்மேல் விரியுங் கதிரே போல்வான் (14-6)

226 பொருத்தமுடைய நம்பி; புறம்போலுள்ளுங் கரியான்; அருத்தித் தாராகணங்களால் ஆரப்பெருகு வானம்போல் விருத்தம் பெரிதாய் வருவான். (14-7)

227 காட்டைநாடித் தேனுகனுங்களிறும் புள்ளுமுடன் மடிய வேட்டையாடி வருவான். (14-8)

## பெருமாள் திருமொழி

228 மாவினை வாய் பிளந்துகந்தமால்: வேலை வண்ணனென் கண்ணன்; வன்குன்ற மேந்தி ஆவினையன்றுய்யக் கொண்ட வாயரேறு. (1-4)

229 ஏறடர்த்தான். (2-3)

230 தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பாலுடனுண்டலும் உடன்றாய்ச்சி கண்டு ஆர்த்த தோளுடை யெம்பிரான். (2-4)

231 வன்பேய் முலையுண்டவாயன். (3-4)

232 தாய்முலைப் பாலிலமுதிருக்கத் தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று பேய்முலை வாய் வைத்து நஞ்சையுண்டு பித்தனென்றே பிறரேச நின்றான். (6-4)

233 குன்றினால் குடைகவித்துக் கோலக்குரவை கோத்துக் குடமாடிக் கன்றினால் விள வெறிந்து காலால் காளியன் தலைமிதித்த வென்றிசேர் பிள்ளை.

234 வஞ்சமேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி வரண்டு நார் நரம்பெழக் கரிந்துக்க நஞ்ச மார் தருசுழிமுலை சவைத்து அருள் செய்து வளர்ந்தான். (7-9)

235 கஞ்சன் நாள் கவர்கருமுகிலெந்தை. (7-10)

236 மல்லைமாநகர்க் கிறையவன் றன்னை வான் செலுத்திய மாயத்தெல்லையில் பிள்ளை. (7-11)

## திருச்சந்த விருத்தம்

237 இட்டிடைப் பின்னை கேள்வன். (13)

238 புள்ளின் வாய் பிளந்தான். (19)

239 பூணி பேணுமாயன். (26)

240 நன்னிறத் தொரின் சொலேழை பின்னை கேள்வன். (33)

241 கொம்பராவு நுண் மருங்குலாயர் மாதர் பிள்ளை. (35)

242 ஆடகத்த பூண்முலை யசோதையாய்ச்சி பிள்ளை; சாடுதைத்தோர் புள்ளதாவி கள்ள தாய பேய் மகள் விடவைத்த வெய்ய கொங்கை ஐயபாலமுது செய்து ஆடக்கை மாதர்வாயமுத முண்டான். (36)

243 காய்த்த நீள் விளங்கனி யுதிர்த்தெதிர்ந்த பூங்குருந்தம் சாய்த்து மாபிளந்த கைத் தலத்த கண்ணன், ஆய்ச்சி பாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணையுண்டு பின் பேய்ச்சி பாலையுண்டான். (37)

244 கடங்கலந்த வன்கரிமருப் பொசித்து ஓர் பொய்கைவாய் விடங்கலந்த பாம்பின் மேல் நடம்பயின்ற நாதன், குடங்கலந்த கூத்தனாய கொண்டல் வண்ணன், (38)

245 வெற்பெடுத்து மாரிகாத்த மேக வண்ணன். (39)

246 மையரிக்கண் மாதரார் திறந்து முன் ஆனையன்று சென்றடர்த்த மாயன். (40)

247 ஆயனாகியாயர் மங்கைவேய தோள் விரும்பினான். (41)

248 ஏறு செற்றடர்த்த விசன். (42)

249 வெஞ்சினத்த வேழ வெண் மருப்பொசித்து உருத்தமா கஞ்சனைக் கடிந்த காலன், வஞ்சனத்து வந்த பேய்ச்சியாவி பாலுள் வாங்கினான். (43)

250 பொற்றையுற்ற முற்றல் யானை போரெ திர்ந்து வந்ததைப் பற்றி யுற்று மற்றதன் மருப்பொசித்த பாகன். (52)

251 மோடியோடிலச்சையாய சாபமெய்தி முக் கணான் கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத் தோட வாணனாயிரம் கரங்கழித்த ஆதிமால். (53)

252 மரங்கெட நடந்தடர்த்து மத்தயானை மத்த கத்து உரங்கெடப் புடைத்தோர் கொம் பொசித்துகந்தவுத்தமன்; துரங்கம் வாய் பிளந்தான். (58)

253 காலநேமிவக்கரன் கரன்முரன் சிரமவை காலனோடுகூட விற்குனித்த விற்கை விரன். (59)

254 குந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டுவாள் பந்தமான தேவர்கள் பரந்து வானகமுற வந்த வாணனீரைஞ்நூறு தோள்களைத் துணித்தான். (70)

255 வண்டுலாவு கோதை மாதர் காரணத்தினால் வெகுண்டு இண்ட வாணனீரைஞ்நூறு தோள்களைத் துணித்தான்; முண்டனீறன் மக்கள் வெப்பு மோடியங்கி யோடிடக் கண்டு நாணி வாணனுக் கிரங்கினான் (71)

256 வாசியாகி நேசமின்றி வந்தெதிர்ந்த நேநுகன் நாசமாகி நாளுலப்ப நன்மை சேர் பனங்கனிக்கு வீசி மேல் நிமிர்ந்த தோளிலில்லை யாக்கினான். (80)

257 சாடுசாடுபாதன்; சலங்கலந்த பொய்கை வாய் ஆடரவின் வன்பிடர் நடம்பயின்ற நாதன். (86)

258 பார்மிகுத்த பாரமுன்னொழிச் சுவானருச் சுனன் தேர்மிகுத்து மாய மாக்கி நின்று கொன்று வென்றிசேர் மாரதர்க்கு வான் கொடுத்து வையமைவர் பாலதாம் சீர்மிகுத் ததோர் தெய்வம். (89)

259 விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற் கண் மாதரார் கடிக்கலந்த தோள் புணர்ந்த காலியாயன், (92)

260 தொறுக்கலந்த வூனமஃதொழிக்க வன்று குன்றமுன் பொறுத்தான். (106)

261 காய்சினந்த காசிமன்னன் வக்கரன் பவுண் டிரன் கேசிதேனுக்கள் நாசமுற்று விழநாள் கவர்ந்தான். (107)

## திருமாலை.

262 கற்றினம் மேய்த்தவெந்தை, (9)

263 மழைக்கன்று வரை முனேந்தும் மைந்தன். (36)

264 வளவெழுந்தவளமாட மதுரை மாநகரந் தன்னுள் கவளமால் யானை கொன்ற கண்ணன். (45)

## அமலனாதிபிரான் ;

265 கோவலனாய் வெண்ணெயுண்டவாயன். (10)

## கண்ணிநுண் சிறுத்தாம்பு.

266 கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண் ணப்பண்ணிய பெருமாயன். (1)

முதலாயிரம் முற்றிற்று.

---

## (இரண்டாவதாயிரம்)

## பெரிய திருமொழி

267 இடிகொள் வெங்குரலின விடையடர்த் தவன். (1-2-3)

268 பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி பெரு முலையூடு உயிரை வற்றவாங்கி யுண்ட வாயன். (1-3-1)

269 கானையாகிக் கன்று மேய்த்துக் குன்றெடுத் தன்று நின்றான். (1-3-4)

270 பேயிடைக்கிருந்து வந்த மற்றவள் தன் பெருமுலை சுவைத்திடப் பெற்ற தாயிடைக் கிருந்த லஞ்சுவனென்று தளர்ந்திட வளர்ந்த வென் தலைவன். (1-4-5)

271 தோரணங்கல்குல் செழுங்கயற் கண்ணி திறத்தொரு மறத்தொழில் புரிந்து பாரணங்கிமிலேறேழு முன்னடர்த்த பனி முகில் வண்ணனெம்பெருமான். (1-4-6)

272 நண்ணார் முன் கடுத்தார்த் தெழுந்த பெரு மழையைக் கல்லொன்றேந்தி இன நிரைக் காத்தடுத்தான். (1-5-5)

273 தாயாய் வந்த பேயுயிரும் விழுதுமுட னுண்ட வாயான். (1-5-6)

274 விளங்கனி முனிந்தான். (1-6-7)

275 கொங்கலர்ந்த மலர்க்குருந்த மொசித்த கோவல னெம்பிரான்; பொங்கு புள்ளினை வாய் பிளந்த புராணர். (1-8-1)

276 வன்பேய்முலை பிள்ளையாயுயிருண்ட வெந்தை பிரான். (1-8-1)

277 நின்ற மாமருதிற்று விழ நடந்த நின்மலன் கன்றி மாரி பொழிந்திடக் கடிதாநிரைக் கிடர்நீக்குவான் சென்று குன்ற மெடுத்தவன். (1-8-3)

278 பார்த்தற்காயன்று பாரதங்கை செய்திட்டு வென்ற பரஞ்சுடர் கோத்தங் காயர் தம் பாடியில் குரவை பிணைந்த வெங்கோவலன். (1-8-4)

279 உறிமேல் நறுநெய்யமுதாகவுண்டான். (1-10-4)

280 மானேய் மடநோக்கி திறத்தெதிர் வந்த ஆனேழ் விடை செற்ற அணிவரைத் தோளன். (1-10-7)

281 வேயினன்ன தோள் மடவார் வெண்ணெ யுண்டானிவனென்று ஏசநின்ற எம்பெரு மான். (2-2-1)

282 பின்னோர் தூது ஆதிமன்னர்க்காகிப் பெரு நிலத்தார் இன்னார் தூதனென நின்றான். (2-2-3)

283 பந்தணைந்த மெல்விரலாள் பாவைதன் காரணத்தால் வெந்திறலே றேழும் வென்ற வேந்தன்; விரிபுகழ்சேர் நந்தன் மைந்தனாக வாகும் நம்பி நம்பெருமான். (2-2-4)

284 விற்பெருவிழவும் கஞ்சனும் மல்லும் வேழ மும் பாகனும் வீழச் செற்றவன், பற்றலர் வியக்கோல்கையிற் கொண்டு பார்த்தன் தன்தேர் முன்நின்றான். (2-3-1)

285 நந்தனூர் களிறு. (2-3-2)

286 வஞ்சனை செய்யத் தாயுருவாகி வந்த பேயலறி மண்சேர நஞ்சமர் முலையூடு உயிர் செகவுண்ட நாதன். (2-3-3)

287 அந்தமில் வரையால் மழை தடுத்தான். (2-3-4)

288 ஆயர் பாவை நப்பின்னை தனக்கிறை; பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை தூதுசென்றியங்கு மென்துணை. (2-3-5)

289 இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றான். (2-3-6)

290 காண்டாவன மென்பதோர் காடமரர்க் கரையனது கண்டவன் நிற்க மூண்டாரழலுண்ண முனிந்தவன், முன்னுலகம் பொறை தீர்த்தாண்டான். (2-4-3)

291 புலமன்னுவடம்புனை கொங்கையினுள் பொறைதீர முனாளடு வாளமரில் பலமன்னர் படச்சுடராழியினைப் பகலோன் மறையப் பணிகொண்டணிசேர் நிலமன்னனுமாயுலகாண்டவன். (2-4-3)

292 வெற்றிகொள் வாளமரில் பாங்காக முன் ஐவரொடன்பளவிப் பதிற்றைந் திரட்டிப் படைவேந்தர் பட நிங்காச் செருவில் நிறை காத்தவன். (2-4-4)

293 புகராருருவாகி முனிந்தவனைப் புகழ்வீட முனிந்துயிருண்டு அசுரன் நகராயின பாழ்பட நாமமெறிந்தான். (2-4-7)

294 பரிவாய் கிண்ட சீரான், போரானைக் கொம்பொசித்த போரேறு, புணர் மருதமிற நடந்த பொற்குன்று. (2-5-1)

295 தொத்தார் சோலைக் காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தான். (2-5-2)

296 அன்று பேய்ச்சி விடம் பருகுவித்தகன், கன்று மேய்த்து விளையாட வல்லான், வரை மீகானில் தடம்பருகு கருமுகில். (2-5-3)

297 பேய்த்தாயை முலையுண்ட பிள்ளை; பிணை மருப்பிற் கருங்களிறு; பிணைமானேக்கின் ஆய்த்தாயர் தயிர்வெண்ணெ யமர்ந்தகோ; குடமாடு கூத்தன்; கோகுலங்கள் தளராமல் குன்றமேந்திக் காத்தான். (2-5-4)

298 திரிசகடம் பாறி வீழப்பாய்ந்தான்; தூதிற் சென்றப் பொய்யறை வாய்ப் புகப்பெய்த மல்லர் மங்கக் காய்ந்தான். (2-5-5)

299 படுமதத்த களிற்றின் கொம்பு பறித்தான். (2-5-6)

300 ஊனுகைப் பேய்முலை நஞ்சுண்டான். (2-5-7)

301 மருதிடை போனான். (2-5-10)

302 பஞ்சிச்சிறு கூழையுருவாகி மருவாத வஞ்சப் பெண் நஞ்சுண்ட வண்ணல்; முன் நண்ணாத கஞ்சைக் கடந்தவன். (2-6-7)

303 வெம்பு சினத்தடல் வேழம் வீழவெண்மருப் பொன்று பறித்தவர் (2-8-3)

304 மஞ்சுயர் மாமணிக்குன்றமேந்தி மாமழை காத்தொரு மாயவானை யஞ்ச அதன்மருப் பன்று வாங்கும் ஆயர். (2-8-4)

305 அரவம் வெருவமுனநாள் பூம்புனல் பொய்கை புக்கான். (2-9-5)

306 பிறையுடையவாணுதல் பின்னை திறத்து முன்னே யொருகால் செருவி லுருமின் மறையுடைமால் விடையேழடர்த்தான். (2-9-9)

307 உறியார்ந்த நறுவெண்ணெ யொளியால் சென்றங்குண்டான், ஆய்ச்சியுர லோடார்க் கத்தறியார்ந்த கருங்களிறே போல நின்று தடங்கண்கள் பனிமல்குந் தன்மையான். (2-10-6)

308 இருங்கைம்மா கரிமுனிந்து பரியைக்கீறி இனவிடைகளேழடர்த்து மருதஞ்சாய்த்து வருஞ்சகடமிற வுதைத்து மல்லையட்டு வஞ்சஞ்செய் கஞ்சனுக்கு நஞ்சானான். (2-10-7)

309 பாரேறு பெரும்பாரந் தீரப் பண்டு பாரதத் துத்தூதியங்கிப் பார்த்தன் செல்வத் தேரேறு சாரதியா யெதிர்ந்தார் சேனை செருக்களத்துத் திறலழியச் செற்றான். (2-10-8)

310 ஆயர் பூங்கொடிக் கினவிடை பொருதவன். (3-1-5)

311 அடல் மழைக்கு நிரை கலங்கிட வரை குடையெடுத்தவன். (3-1-8)

312 வேல்கொள் கைத்தலத்தரசர் வெம் போரினில் விசயனுக்காய் மணித்தேர் கோல் கொள் கைத்தலத் தெந்தை பெம் மான். (2-1-9)

313 மௌவல் குழலாய்ச்சிமென் தோள்நயந் தான். (2-2-7)

314 மாவாயினங்கம் மதியாது கீறி மழை மாமுது குன்றெடுத் தாயர் தங்கள் கோவாய் நிரை மேய்த்தான். (2-2-8)

315 வாடமரு திடைபோகி மல்லரைக் கொன் றொக்கலித்திட்டு ஆடல் நன்மாவுடைத்தா யராநிரைக் கன்றிடர் தீர்ப்பான் கூடிய மாமழை காத்த கூத்தன். (2-2-1)

316 பேய்மகள் கொங்கை நஞ்சுண்டபிள்ளை. (2-2-2)

317 பண்டிவன் வெண்ணெயுண்டா னென் றுய்ச்சியர் கூடியிழிப்ப எண்டிசையோரும் வணங்க விணைமருதாடு நடந்திட்டான். (2-2-2)

318 வளைக்கை நெடுங் கண்மடவாராய்ச்சி யரஞ்சி யழைப்பத் தளைத்தவிழ் தாமரைப் பொய்கைத் தண்தடம்புக் கண்டர் காண முளைத்த வெயிற்றழல் நாகத்துச்சியில் நின்றது வாடத் திளைத்தமர் செய்து வருவான். (2-2-5)

319 உருவக் கருங்குழலாய்ச்சி திறத்தினமால் விடை செற்றுத் தெருவில் திளைத்து வருவான். (2-2-5)

320 மலங்கவரு மழை காப்பான் உய்யப் பருவரை தாங்கி யாநிரை காத்தான். (2-6-1)

321 அழகாய காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழ வீதிவருவான்

322 திகிரியினால் வாணன் திண்டோள் நேர்ந்தவன்

323 மாகீண்டு வேழமட்ட விண்ணவர் கோன்

324 மட்டவிழும் குழலிக்கா வானோர்காவில் மரம் கொணர்ந்தான்

325 வரையெடுத்த தோளாளன்

326 போரானைக் கொம்பொசித்த புட்பாகன்

327 மன்னர் தூதுவனாயவன்

328 பின்னைதன் காதலன்

329 தடந்தாமரைப் பொய்கை புக்கான்

330 அரவமதனுச்சி தன்மேல் அடிவைத்த அம்மான்

331 முற்றாவிளையார் விளையாட்டொடு காதல் வெள்ளம் விளைவித்தவம்மான்

332 ஆய்ச்சிமென்தோள் நயந்த விகிர்தன்

333 மருதொடு நற்சகடமிறுத்தருளும் தேவன்

334 கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த பிரான்

335 தேனுகனும் பூதனைதன் ஆருயிரும் செகுத்தான்

336 காமனைப்பயந்த கருமேனியுடையம்மான்

337 கன்றதனால் விளவெறிந்து கனியுதிர்த்த
338 குடமாடு கூத்தன் [காளை
339 பின்னை செவ்வித்தோள் புணர்ந்துகந்த திருமால்
340 மதயானை கொம்பதனைப் பறித்தெறிந்த கூத்தன்
341 காரார்ந்த திருமேனிக் கண்ணன்
342 காளியன் பணவரங்கில் அருநடஞ் செய்த வும்பர்கோன்
343 கோநிரை மேய்த்தவை காத்தவன்
344 மல்லரைக் கொன்று கஞ்சனை யுதைத்தவன்
345 வாணனை ஆயிரந்தோள்களும்
346 பரிகீறிய வப்பன் [துணித்தவன்
347 கஞ்சனைக் காய்ந்த காளையம்மான்
348 வாணனுயிரம் தோளும் துணிய ஆழிதொட்டான்
349 ஆரும் பேணு நஞ்சுண்டுகந்த பிள்ளை
350 கருமுகில்போல் திருநிறத்தென் கண்ணர்
351 குன்றமேந்திக் கடுமழை காத்த வெந்தை
352 பின்னை செவ்வித் தோள் புணர்ந்த
353 பூங்குருந் தொசித்தான் [வெந்தை
354 புள்வாய் பிளந்தான்
355 எருதடர்த்த வெந்தை
356 பல்லரசவிந்து வீழப் பாரதப்போர் முடித்தான்
357 பாகன் வீழ மதகரி மருப்பொசித்தான்
358 காவளம் கடிதிறுத்துக் கற்பகம் கொண்டு போந்தான்
359 குன்றால் குளிர்மாரி தடுத்துகந்தான்
360 கரிகொம்ப தொசித்த களிறு
361 கோலால் நிறை மேய்த்த கோவலர்கோ
362 கவளயானை கொம்பொசித்த கண்ணன்
363 கஞ்சன் விட்ட வெஞ்சினத்த களிறடர்த்த காளை
364 வஞ்சமேவி வந்த பேயினுயிரையுண்ட மாயன்
365 ஆயர் மாதர் கொங்கைபுல்கு செண்டன்
366 [கார்நிற மேகங்கலந்த தோருருவக் கண்ணனூர்
367 கஞ்சனைக் காய்ந்த காளமேகத் திருவுருவன்
368 மாவாய் பிளந்து மல்லடர்த்து மருதம் சாய்த்தமால்
369 மழவிடைகள் ஏழன்றடர்த்தாமல்
370 வாணன் தடந்தோள் துணித்த தலைவன்
371 வேந்தர்க்குத் தூதாயவேந்தர்
372 பின்னை பெருந்தண் கோலம் பெற்றார்
373 முலைகொடுத்தாளுயிருண்டவன்
374 காளுயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருகநந்தன் பெற்ற ஆனாயன்
375 பேய்மாய முலையுண்டிவ் வுலகுண்ட [பெருவயிற்றன்
376 நாமறிய ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி
377 மன்னர்க்காய் முன்னம் சென்ற தூதாளன்
378 ஐவர்க்காய் அமரிலுய்த்த தேராளன்
379 பனிகாத்தவம்மாள்
380 ஆனாயனான்
381 திரிசகடம் தளர்ந்துதிர உதைத்தவன்
382 ஆழியாலன்றங் காழியை மறைத்தான்
383 பேயினார் முலையூண்பிள்ளை
384 ஆயனாயன்று குன்ற மொன்றெடுத்தான்
385 வக்கரன் வாய்முன் கீண்டமாயன்
386 கண்ணியார் குறுங்கயிற்றால் கட்ட வெட்டென்றிருந்தான்
387 கொம்பனார்பின்னை கோலங்கூடுதற் கேறு கொன்றான்
388 மல்லர்மாள மல்லடர்த்தமல்லன்
389 கோதில் செங்கோல் குடைமன்னரிடை நடந்ததூதன்
390 பின்னை பொருட்டு ஆன்வென்றான்
391 மென்தோளாய்ச்சிக்கன்பன்
392 மருதம் சாய்த்த நாதன்
393 புகுவாய்நின்ற போதகம் வீழப் பொருதான்
394 அந்தணாளன் பிள்ளையை அந்நான்றளித்தான்
395 சிந்துக்கோன் விழ விசயன்தேரூர்ந்த விமலன்
396 பார்த்தன் றன்தேரையூரும் தேவதேவன்
397 இலைத்தடத்த குழலூதி
398 ஆயர்மாதரினவளை கொண்டான்
399 கனித்துவர் வாய்பின்னை கேள்வன்

400 பின்னைக்குமணவாளன்
401 ஒளியா வெண்ணெயுண்டான்
402 ஆப்புண்டு விம்மியழுதான்
403 கல்லார் திரடோள் கஞ்சனைக் காய்ந்தான்
404 காளியன் மேல் பாய்ந்தான்
405 விறல்வாணன் வியந்தோள் வனத்தைத் துணித்துகந்தான்
406 ஆயர்கோவாய் நின்றான்
407 கழல் மன்னர் கலங்கச்சங்கம் வாய் வைத்தான்
408 அசோதை தன்சிங்கம்
409 காண்டவத்தைத் தீ மூட்டிவிட்டான்
410 கற்பகத்தை வண்துவரை நட்டான்
411 விசயன் தேரூர்ந்தான்
412 வசுதேவர் வாழ்முதல்
413 வளைகொண்ட வண்ணத்தன் பின் தோன்றல்
414 பகல் கரந்த சுடராழிப்படையான்
415 வரையால் நிரைமுன் காத்தபெருமான்
416 மருவாத விடைதானேழும் வென்றான்
417 குன்றுகுடையாவெடுத்த வடிகள்
418 புள்வாய் பிளந்த புனிதன்
419 குடமாடிய கூத்தன்
420 ஐவர்க்கின்னருள் செய்யுமெம்பிரான்
421 வெண்ணெயுண்டுரலினிடை யாப்புண்ட தீங்கரும்பு
422 விளங்கனிமேல் இளங்கன்று கொண் டெறிந்த கூத்தர்
423 நள்ளிருட்கண் வந்த வெந்தை
424 விடையாறேழ் விறலாழி விசைத்தான்
425 குன்றால் மாரிதடுத்தவன்
426 கஞ்சனைக்காய்ந்தான்
427 வஞ்சனப் பேய்முலையூடு உயிர்வாய் மடுத் துண்டான்
428 மால்வரையேந்தும் பண்பாளன்
429 பெற்ற தாயாலாப் புண்டிருந்தழு தேங்கும் தாடாளான்
430 கஞ்சனையஞ்ச முனிந்தான்
431 ஆன்விடையேழும் முன்வென்றான்
432 தயிர் வெண்ணெயுண்டுகந்தமாயோன்
433 பேய்முலைத்தலை நஞ்சுண்டபிள்ளை
434 துரங்கம் படச்சீறிய தோன்றல்
435 துரங்கம் வாய்கீண்டுகந்தான்
436 வரையெடுத்த பெருமான்
437 கரிவெருவ மருப்பொசித்தான்
438 புணர்மருதமிற நடந்தான்
439 தயிருண்ட வாய்துடைத்த மைந்தன்
440 காமன் தன்தாதை
441 நந்தன் மதலை
442 தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றிய தோன்றல்
443 மாரிமாக்கடல் வளைவணர்க்கிளையவன்
444 பேயினார் உயிருண்டிடும் பிள்ளை
445 வெண்சங்கம் வாய்வைத்த மைந்தன்
446 காமறபயந்தான்
447 கருந்தாள் களிறொன்றொசித்தான்
448 காலால் சகடம் பாய்ந்தான்
449 பஞ்சவர்க்காய்த் தூது சென்றான்
450 கன்றால் விளங்காயெறிந்தான்
451 வரைகுடையெடுவிய நெடியர்
452 அளைவெணெய் போதுசெய்த மரியபுனிதர்
453 ஆனுருவிறையன்
454 இருள் நாள் பிறந்தவம்மான்
455 படையாலாழி தட்டபரமன்
456 உண்ணா நஞ்சுண்டுகந்தான்
457 பஞ்சவர் பாகன்
458 மன்னர்கள் மடிய மணி நெடுந்திண்டேர்
459 வெஞ்சினவேழம் மருப்பொசித்த வேந்தர்
460 கோவலர் கூத்தன்
461 கலிமாந்தேரைவர்க்காயமரிலுய்த்தான்
462 சினவேழம் கொலையார் கொம்பு கொண்டான்
463 ஆயனாயமைந்தனார்
464 தூது சென்ற மன்னனார்
465 குடங்கலந்தாடிக் குரவை முன்கோத்த கூத்த வெம்மடிகள்
466 வடமாமதுரைப் பிறந்தான்
467 கேசவநம்பி
468 பாரதத்துத்தேர் முன் நின்றுகாத்தவன்
469 மாமழை நின்று காத்துகந்தான்
470 ஆனைவாட்டியருளும் அமரர்தம்கோ

471 கூந்தலார் மகிழ் கோவலன்
472 பெற்றமாளி
473 நந்தன் பெறப்பெற்ற நம்பி
474 தெருவில் திளைக்கின்ற நம்பி
475 விரையாதே வெண்ணெய் விழுங்கும் விகிர்தன்
476 வஞ்சப்பெண் நஞ்சுண்ட கற்றுயன்
477 பேய்ச்சி முலையுண்ட பிள்ளை
478 நந்தன்தன் போரேறு
479 அளைவெண்ணெ யுண்டாய்ச்சியராலாப் புண்டிருந்தவன்
480 உரலோடாப் புண்டிருந்த பெருமான்
481 மாலை நறுங்குஞ்சிநந்தன் மகன்
482 தெள்ளிய வாய்ச்சிறியான்
483 நந்தன் பெற்றமதலை
484 மன்னுகருங்களிற்றுருயிர் வவ்விய மைந்தன்
485 ஆய்மடவாரொடு கூடிக்குரவை பிணை கோமளப்பிள்ளை
486 மாவாய் கீண்ட மணிவண்ணன்
487 மாமழை அன்று காத்தவம்மான்
488 ஐவர் தூதனுய்ச் சென்றமாயன்
489 இளையாரொடும் மன்றில் குரவை பிணைந்தமால்
490 வன்பேய் முலைவாங்கியுண்ட அவ்வாயன்
491 பல்லொடு கஞ்சனும் துஞ்சவென்ற மணி வண்ணன்
492 வென்றிவிடையுடன் ஏழடர்த்தவடிகள்
493 உறியார் நறுவெண்ணெயுண்டுகந்தார்
494 இமையோர் தொழுதேத்திக் கைத் தாமரை குவிக்கும் கண்ணன்
495 இணைமருதிற்று விழநடைகற்ற தெற்றல்
496 நந்தன் குலமதலையாய் வளர்ந்தான்
497 தாழ்குழலார் வைத்த தயிருண்டான்
498 உறியார் நறுவெண்ணெயுண்டுகந்தான்
499 கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்
500 கண்களிப்ப மன்றில் மரக்கால் கூத் தாடினுன்
501 தூதனுய் மன்னவனால் சொல்லுண்டான்
502 தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான்
503 மேவாளுயிருண்டமுதுண்டவாயான்
504 உறியார் நறுவெண்ணெய் தானுகந் துண்டசிறியான்
505 ஆன்விடையேழன்றடர்த்தான்
506 குன்ற மெடுத்தானிரை காத்தவன்

## திருநெடுந்தாண்டகம்

507 கல்லெடுத்துக் கல்மாரிகாத்தான்
508 மல்லடர்த்து மல்லரை அன்றட்டான்
509 மாகீண்டகைத் தலத்தென் மைந்தன்
510 கன்று மேய்த்தினிதுகந்த காளை
511 மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தான்
512 வல்லசுரர்குலம் களைந்த வேந்து
513 ஆமருவிநிரை மேய்த்த அமரர்கோமான்
514 ஆயர்குலமகளுக்கரையன்
515 குன்றெடுத்த தோளினுன்

## மூன்றுவதாயிரம் - இயற்பா

516 குருவிற் பேயளவுகண்ட பெருமான்
517 அசைவில் சீர்க்கண்ணன்
518 அலகளவுகண்ட சீராழியான்
519 பேய்முலை நஞ்சூணுகவுண்டான்
520 புள்வாய்கீண்டான்
521 மருதிடைபோயவன்
522 பெற்றூர் தளைகழலப் பேர்ந்தவன்
523 கடைவெண்ணெயுண்டான்
524 மலையால் குடைகவித்தான்
525 மாவாய் பிளந்தான்
526 கொலையானைப் போர்க்கோ டொசித்தான்
527 பூங்குருந்தஞ் சாய்த்தான்
528 வெண்சங்கமூதியவாய்மால்
529 புணர்மருதினூடு போனுன்
530 பூங்குருந்தஞ் சாய்த்தான்
531 மால்விடையேழ் செற்றுன்
532 சோலை சூழ்குன்றெடுத்தான்
533 குன்றெடுத்துப் பாயும் பனிமறுத்த பண்பாளன்
534 கனிசாயக் கன்றெறிந்ததோளான்
535 மாவாய் பிளந்தமகன்

536 நல்லாயரேறு
537 ஏறேழும் வென்றடர்த்தவெந்தை
538 கோணுகங் கொம்பொசித்தகோ
539 கூந்தல் வாய்கிண்டான்
540 கொங்கை நஞ்சுண்டான்
541 விளவின்காய் கன்றினால் விழ்த்தவன்
542 வக்கரனைக் கொன்றான்
543 விமுதுண்ட வாயான்
544 மால்விடையேழ் செற்றான்
545 பேய்ச்சி பாலுண்ட பிரான்
546 பேய்ச்சி பாலுண்ட பெருமான்
547 தெருளாமொழியான்
548 குருந்தொசித்த கோபாலகன்
549 கஞ்சைக்கடந்தான்
550 குன்றம் குடையாக ஆகாத்த கோ
551 துரகவாய் கீண்டான்
552 முற்றல் முரியேற்றின் முன்னின்று மொய்ம் பொழித்தான்
553 அருவரையால் ஆனிரைகள் காத்தான்
554 அணிமருதம் சாய்த்தான்
555 கற்றுக்குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான்
556 வெற்றிப்பணிலகம் வாய்வைத் துகந்தான்
557 கரியுருவம் கொம்பொசித்தான்
558 விளங்கனிக்குக் கன்றெறிந்தான்
559 மற்பொன்ற நீண்ட தோள்மாள்
560 குழக்கன்று கொண்டெறிந்தான்
561 குடநயந்த கூத்தன்
562 வெங்கொங்கையுண்டான்
563 முரனுள் வலஞ்சுழிந்த மொய்ம்பன்
564 பின்னைக்காய் ஏற்றுயிரையட்டான்
565 தீங்குழல்வாய் வைத்தான்
566 மண்ணுண்டும் பேய்ச்சி முலையுண்டு மாற்றாதான்
567 கண்ணிக் கயிற்றினால் கட்டக் கட்டுண்டிருந்தான்
568 வாணன் தோள் செற்றான்
569 துரகத்தை வாய் பிளந்தான்
570 வெங்கதிரோன் மாயத் தேராழியால் மறைத்தார்
571 சினப்போர்ச்சு வேதனைப் புகழ்ந்தான்
572 முலைக்கால் விடமுண்ட வேந்தன்
573 பெருங்குருந்தம் சாய்த்தவன்
574 முனிவஞ்சப் பேய்ச்சிமுலை சுவைத்தான்
575 மாண்குன்றமேந்தி
576 ஆய்ச்சிவன் தாம்புகளால் புடைக் கலந்தான்
577 ஆவினை மேய்க்கும் வல்லாயன்
578 சுருங்குறி வெண்ணெய் தோடுவுண்ட கள்வன்
579 ஓர் ஐவரையே காத்தான்
580 தாமோதரனர்
581 வெங்கோட்டேறேழுடனே கொன்றான்
582 மாவாய் பிளந்தார்
583 மாயவள் நஞ்சூண் பாவித்துண்டான்
584 கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார்
385 உறுமாறு மாயவர்
586 புள்ளின்வாய் கீண்டான்
587 குன்றுகுடையாக ஆகாத்த கோவலனர்
588 ஆழியங்கைப் பேராயன்
589 மல்லர்நாள் வவ்வினன்
590 கைகலந்த வாழியான்
591 ஆராவயிற்றினேடாற்றாதான்
592 வெங்கோவியல் நாகத்தைச் சீரார் திருவடியால் பாய்ந்தான்
593 பேராமருதிறுத்தான்
594 ஓரானை கொம்பொசித்த சீரான்
595 பின்னைமணாளன்
596 பேயலற முலையுண்டபிள்ளை
597 மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதன்

## நான்காவதாயிரம் – திருவாய்மொழி

598 களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வன்
599 வல்லானயர் தலைவன்
600 இளவேறேழும் தழுவியவெந்தை
601 விடப்பாலமுதா அமுது செய்திட்ட மாயன்
602 எங்களாயர் கொழுந்து

603 இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே
செய்துவிழிக்கும் பிரான்
604 வெம்மாவாய் கீண்ட செம்மா கண்ணன்
605 வெற்பையொன்றெடுத்தொற்க
மின்றியே நிற்குமம்மான்
606 வைகலும் வெண்ணெய் கைகலந்
துண்டான்
607 ஏழ்விடை கொண்டான்
608 வேழமருப்பையொசித்தான்
609 கற்றைத்துழாய் முடிக்கோலக்கண்ண
பிரான்
610 உருளுஞ்சகடமுதைத்த பெருமானார்
611 கோபால கோளரியேறு
612 காக்குமியல்வினன் கண்ணபெருமான்
613 கார்முகிலென் கண்ணன்
614 உறிக்கொண்ட வெண்ணெய்
பாலொளித்துண்ணுமம்மான்
615 விறல்வாணனாயிரந்தோள் துணித்தார்
616 விறல்கஞ்சனை வஞ்சனை செய்தார்
617 காரார்கருமுகில் போலென்னம்மான்
618 குடக்கூத்தவம்மான்
619 வாரணத்தை மருப்பொசித்த பிரான்
620 காமனைப் பயந்தான்
621 கார்முகில் போல் வண்ணனென் கண்ணன்
622 கையார் சக்கரக்கண்ணபிரான்
623 அழக்கொடியட்டான்
624 வாணனையாயிரந்தோள் துணித்தபுள்
வல்லான்
625 மாமருதினிடை போயவெம்பெருந்தகை
626 வேயின்மலிபுரை தோளிபின்னைக்கு
மணாளன்
627 வைதிகன் பிள்ளைகளையுடலொடுங்
கொண்டு கொடுத்தவன்
628 துயரில் சீர்க்கண்ணன் மாயன்
629 கடிசேர் துழாய் முடிக்கண்ணன்
630 பணைத்தாள் மதகளிறட்டவன்
631 ஆய்ச்சியர் தம்மொடும் கொல்லைமை
செய்துதுரவை பிணைந்தவர்
632 எருதேழ்தழீஇக்கோளியார்
633 கோவலனார்
634 குடக்கூத்தனார்
635 கோவையாள் பொருட்டு
ஏற்றினெருத்தமிறுத்தான்
636 குலநல்யானை மருப்பொசித்தான்
637 மாயப்பேயுயிர் மாய்த்த வாயமாயன்
638 கண்ணனெம்பிரான் காலசக்கரத்தான்
639 பேய்ச்சி முலைசுவைத்தான்
640 வல்வினை தீர்க்கும் கண்ணன்
641 வெம்மாபிளந்தான்
642 குன்றமொன்றால் மழைகாத்த பிரான்
643 குடமாடி
644 மாயப்போர்த் தேர்ப்பாகனார்
645 கவளக்கடாக்களிறட்ட பிரான்
646 வண்துவராபதி மன்னன்
647 கடையாவின் கழிகோல்கைச் சறைபினார்
648 நெறியெல்லாமெடுத் துரைத்த நிறை
ஞானத் தொரு மூர்த்தி
649 தயிர் வெண்ணெயுண்டான்
650 ஊர்ந்த சகடமுதைத்த பாதத்தன்
651 பேய்முலைசார்ந்து சுவைத்த செவ்வாயன்
652 காரமர் மேனி நங்கண்ணன்
653 வண்துவராபதி மன்னன்
654 மணிவண்ணன் வாசுதேவன்
655 காவிசேர்வண்ணனெங் கண்ணன்
656 காரன்ன மேனிநங்கண்ணன்
657 கைவந்த சக்கரத்தென் கண்ணன்
658 குலவாயர் கொழுந்துக்குக் கேள்வன்
659 மாறு சேர்படை நூற்றுவர்மங்க
நீறுசெய்த வெந்தை
660 கைதவங்கள் செய்யுங்கருமேனியம்மான்
661 புள்ளின்வாய் பிளந்தான் மருதிடை
போயினான்
662 எருதேழடர்த்த வென்கள்ளமாயவன்
663 பேய்ச்சிமுலையூடவளையுயிருண்டான்
664 ஆயர்குலத்தை வீடுய்யத் தோன்றிய
கருமாணிக்கச்சுடர்
665 வெண்ணெய்வார்த்தையுள் சீற்றமுண்
டழுகூத்தவப்பன்
666 துரங்கம் வாய் பிளந்தான்
667 நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பி
668 சாயக் குருந்த மொசித்த தமியன்
679 மாயச் சகடமுதைத்த மணாளன்
670 பேயைப் பிணம்படப் பாலுண்டபிரான்
671 மற்பொரு தோளுடை மாயப்பிரான்

672 ஆடியமாநெடுந் தேர்ப்படை நீறெழச் செற்ற பிரான்
673 மாவை வல்வாய் பிளந்த மதுசூதன்
674 கார்த்திரள் மாமுகில் போல் கண்ணன்
675 சகட வசுரருடல் வேறுப்பிளந்து வீயத் திருக்காலாண்ட பெருமான்
676 கொடுவல்லசுரர் குலமெல்லாஞ் சீறு வெறியுந்திருநேமி வலவன்
677 புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே போன முதல்வன்
678 அடலாழியேந்தியசுரர் வன்குலம் வேர் மருங்கறுத்தான்
679 உட்குடையசுரருயி ரெல்லாமுண்ட வொருவன்
680 குன்றேந்திக் கோநிரைகாத்தன்
681 ஆய்மகளன்பன்
682 முழங்கு சங்கக்கையன்
683 கனிந்த விளவுக்குக் கன்றெறிந்த கண்ண [ பிரான்
684 ஆழியங்கையன்
685 தீமழை காத்துக்குன்றமெடுத்தான்
686 குன்ற மெடுத்த பிரான்
687 குன்றெடுத்தாநிரை மேய்த்தவை காத்த [ வெங்கூத்தன்
688 ஆயர்குலத்திற்றிளம் பிள்ளை
689. ஆழியங் கண்ணபிரான்
690 ஈட்டிய வெண்ணெயுண்டான்
691 சித்திரத் தேர்வலவன் திருச்சக்கரத்தான்
692 கள்ளவிழ் தாமரைக் கட்கண்ணன்
693 துயரங்கள் செய்யுங்கண்ணன்
694 என்னையாளுங் கண்ணன்
695 உருப்பிணி நங்கையணி நெடுந்தோள் புணர்ந்தான்
696 வாணனையாயிரந்தோள் துணித்தான்
697 எடுத்த பேராளன் நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவன்
698 அசோதைக்கடுத்த பேரின்பக் குலவிளங் களிறு
699 பின்னைதோள் மணந்த பேராயன்
700 அசுரர்வன்கையர் கூற்றம்
701 கோதில் புகழ்க்கண்ணன்
702 கஞ்சனைத் தகர்த்த சீர்கொள்சிற்றுயன்
703 அசுரர்வன்கையர் வெங்கூற்று
704 நல்தேர்த்தனிப்பாகன்
705 உத்தரமதுரைப் பிறந்தமாயன்
706 பாரதம் பொருதமாயன்
707 புகழும் பொருபடையேந்திப் போர் புக்கசுரரைப் பொன்றுவித்தான்
708 மல்லலஞ் செல்வக்கண்ணன்
709 புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னு மிக்கை யென்னம்மான்
710 ஐங்கணை வேள்தாதை
711 மல்லைமூதூர் வடமதுரைப் பிறந்தவன்
712 எங்கள் பெற்றத்தாயன்
713 தாதுசேர்தோள் கண்ணன்
714 மண்ணின் பாரம் நீக்குதற்கே வட மதுரைப்பிறந்தான்
715 மழைக்கன்று குன்றமெடுத்தாநிரை காத்தான்
716 தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணன்
717 ஆருமதயானையடர்த்தவன்
718 என்னுயிர்க் கண்ணபிரான்
719 வித்தகன் கோவிந்தன்
720 கருவளர் மேனிநங்கண்ணன்
721 கடியனுய்க் கஞ்சனைக் கொன்ற பிரான்
722 வடிவேல் தடங்கண் மடப்பின்னை மணாளன்
723 வாளேய் தடங்கண் மடப்பின்னை மணாளன்
724 எம் கோவலர் கோ
725 இகலிடத்தசுரர்கள் கூற்றம்
726 காரொக்கு மேனிநங்கண்ணன்
727 மடப்பின்னைதன் கேள்வன்
728 குதற்று வல்லசுரர்கள் கூற்றம்
729 அசுரரைத் துணிக்கும் வல்லரட்டன்
730 காமனைப் பயந்த காளை
731 செங்கனிவாயெங்களாயர் தேவு
732 வாள் கெண்டையொண் கண்மடப் பின்னைதன் கேள்வன்
733 கைச்சக்கரத்தண்ணல்
734 மெய்போலும் பொய்வல்லன்
735 பாழியந்தோளாம் வரையெடுத்தான்
736 வாரணந் தொலைதத காரணன்
737 பேயார்முலையுண்ட வாயான்
738 மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க் காய்ப் படை தொட்டான்
739 கொலையானை மருப்பொசித்தான்

**ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன்**

**முற்றிற்று.**